# பொருளடக்கம்






இப்பத்திரிகையில் விளம்பரங்களை வெளியிடத் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

**சென்னை**
Ph : 044-234 7384
234 7399
**e-mail : advertisements @chandamama.org**

**டில்லி**
மோனா பாட்டியா
Ph : 011-651 5111
656 5513/656 5516

**மும்பை**
ஷகீல் முல்லா
Mobile : 98203-02880
Ph : 022-266 1599
266 1946/265 3057

## SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**
***Remittances in favour of Chandamama India Ltd.***
**to**
**Subscription Division**
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony,
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail : subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**
இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத்தபால் வாயிலாக
பனிரெண்டு இதழ்களுக்கு ரூ 900
இந்தியாவிற்குள் ரூ 120
**புக்போஸ்டில்**
உங்கள் சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணி யார்டரிலோ சந்தமாமா இந்தியா லிமிடெட் என்ற பெயரை எழுதி அனுப்பவும்.



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# அமைதி நிலவட்டும்

உலகின் ஆறு பெரிய மதங்களில் நான்கு இந்தியாவில் தோன்றியவை. அவை இந்து மதம், பௌத்த மதம், ஜைன மதம், சீக்கிய மதம் என்பன. கிருத்துவ மதம் கி.பி. முதலாவது நூற்றாண்டில் தான் இந்தியாவிற்கு வந்தது. இஸ்லாம் கி.பி. ஆறாவது நூற்றாண்டில் இந்நாட்டிற்கு வந்தது. முதலில் வியாபாரத்திற்காக இங்கு வந்த முகம்மதியர்கள் பின்னர் ஆக்கிரப்பாளர்களாகி, அதன்பின் இந்நாட்டை ஆண்டனர். முகம்மதியர்கள் ஐந்து நூற்றாண்டு காலம் நம் நாட்டை ஆண்டனர். முகம்மதிய மன்னர்களில் முகலாய சக்ரவர்த்தி அக்பர் குறிப்பிடத்தக்கவர். அவர் தீன்-ஏ-இலாஹி என்ற மதச் சார்பற்ற கொள்கை கொண்ட மதத்தை நிறுவினார். இவருடைய காலத்தில் தான் சீக்கிய மதம் தோன்றியது.

நாடு அந்நியர் ஆட்சியிலிருந்து விடுபட சுதந்திரப் போராட்டத்தை ஒன்றுபட்டு நடத்தியது. ஆனால் துரதிர்ஷ்டவசமாய் மத அடிப்படையில் நம் நாடு இந்தியா, பாகிஸ்தான் என இரு நாடுகளாகப் பிரிக்கப்பட்டது. நம் நாட்டு அரசியல் நிர்ணயச் சட்டத்தில் மதச்சார்பின்மை வலியுறுத்தப் பட்டுள்ளது. இந்திய, பாகிஸ்தான் போர்கள் நடந்தது கூட பிரதேச உரிமைகளை அடையத்தான். சுதந்திரம் அடைந்து 55 ஆண்டுகளான போதிலும் மதவெறி அடங்கியபாடில்லை. இதில் தவறு யாருடையது என்பது முக்கியமல்ல. ஆனால் அண்மையில் நடந்த பல கோர சம்பவங்களால் பல அப்பாவி மக்கள் உயிரிழந்தனர். இதற்காக வெட்கி நாம் தலைகுனிய வேண்டும். அகிம்சாவாதியான மகாத்மா காந்தி பிறந்த குஜராத் மாநிலத்தில் கூட மதவெறி தலைவிரித்து ஆடி நம்மைத் தலைகுனிய வைத்துவிட்டது.

அம்புலிமாமா தன் எல்லா இதழ்களிலும் எல்லா மதங்களும் சுகவாழ்வு வாழ வேண்டும் என்பதையே வலியுறுத்தி வருகிறது. எனவே எல்லா மதத்தினரும் சண்டையின்றி சமாதானமாக வாழ யாவரும் நல்வழியைக் காட்டுவோம்.

---

ஆசிரியர் : **விஸ்வம்**
**Visit us at : http://www.chandamama.org**

## இந்திய மாவீரர்கள் புதிர்ப் போட்டியில் கலந்து கொண்டு அற்புதமான பரிசுகளை வெல்லுங்கள்

# இந்திய மாவீரர்கள்-8

இந்திய வரலாற்றில் எண்ணற்ற மாவீரர்களைக் காணலாம். நீங்கள் எவ்வளவு பேர்களை நினைவில் சரியாக வைத்துள்ளீர்கள் என்று பார்க்கலாமா?

**முற்றிலும் சரியான விடைகள் கொண்ட மூன்று கூப்பன்களுக்கு சைக்கிள்கள் பரிசளிக்கப்படும்***



1. நான் தானேஸ்வரின் மன்னனாக கி.பி.606ல் என் பதினாறாவது வயதில் அரியாசனத்தில் அமர்ந்தேன். தர்ம சிந்தனையும் பிறர் நலனையுமு விரும்பியவன் நான். என் பெயர் என்ன?

---

2. விஜயநகர் சாம்ராஜ்ய மன்னர்களில் நான் சிறந்த மன்னனாகக் கருதப்பட்டவன். என் ஆட்சி கி.பி.1505லிருந்து 1527 வரை இருந்தது. நான் யார்?

---

3. நான் என்னை மராட்டிய மன்னனாகப் பிரகடனப்படுத்திக் கொண்டேன். ராய்கடில் எனக்கு 'சத்ரபதி' என்ற பட்டம் அளிக்கப்பட்டது. என்னைப் பற்றி மேலும் கூறத் தேவை இல்லையே. நான் யார்?

---

4. மேவாரின் அரசகுமாரனாகிய என்னை அக்பர் சக்ரவர்த்தி ஹல்திகாட்போரில் தோற்கடித்த போதிலும் நான் தலை வணங்க மறுத்துவிட்டேன். நான் யார்?

---

5. நான் பிரபல பல்லவ மன்னன் எனக் கருதப்பட்டவன். சாளுக்கிய மன்னன் இரண்டாம் புலிகேசியைத் தோற்கடித்தேன். மகாபலிபுரத்தில் கற்கோயில்களை அமைத்தவன். நான் யார்?

---

ஒவ்வொரு வினாவிற்கும் அதன் கீழுள்ள வெற்றிடத்தில் விடையைத் தெளிவாக எழுதவும். இந்த ஐவரில் உங்களுக்கு பிடித்தமான தேசியமாவீரர் யார் என்றும் அதற்கான காரணங்களை பத்து சொற்களில் எழுதவும். எனக்கு மிகவும் பிடித்த தேசிய மாவீரர் ........................................

........................................

........................................

போட்டியாளரின் பெயர்: ........................................

வயது: .................. வகுப்பு: ..............................

முகவரி: ........................................

........................................

பின்கோடு: ...................... போன்: ......................

போட்டியாளரின் கையொப்பம்: ..............................

பெற்றோரின் கையொப்பம்: ..............................

இந்தப் பக்கத்தைக் கத்தரித்துக் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்

**இந்திய மாவீரர்கள் புதிர்ப்போட்டி-8**
**சந்தமாமா இந்தியா லிமிடெட்**
நெ. 82. டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை-600 097
அனுப்ப வேண்டிய கடைசித் தேதி ஜூன் 5, 2002

**நிபந்தனைகள்:**

1. இப்போட்டி 8 முதல் 14 வயதிற்குட்பட்ட சிறார்களுக்கு மட்டுமே.
2. *எல்லா மொழிப்பதிப்புகளின் கூப்பன்களிலிருந்தும் மூன்று பேர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இச்சிறார்களுக்கு அவர்களுக்கு ஏற்ற அளவு சைக்கிள்கள் வழங்கப்படும். முற்றிலும் சரியான விடைகள் கொண்ட பல கூப்பன்கள் இருந்தால், 'எனக்கு மிகவும் பிடித்தமான மாவீரர்' என்ற தலைப்பில் எழுதப்பட்ட வாக்கியங்களில் சிறந்தனவாகத் தேர்ந்தெடுக்கப்படுபவைகளுக்குப் பரிசு அளிக்கப்படும்.
3. நடுவர்களின் தீர்ப்பே இறுதியானது.
4. இப்போட்டி தொடர்பாக எவ்விதக்கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ளப்படமாட்டாது.
5. வெற்றிபெற்றவர்களுக்குத் தபால் வாயிலாக முடிவுகள் தெரிவிக்கப்படும்.

இப்பரிசுகளை உங்களுக்கு அளிப்பவர்கள்




HERO CYCLES

# HEY PEOPLE! TELL US HOW CLOSE YOU'RE TO POPEYE AND YOU COULD WIN A POPEYE WATCH FROM DASH!




Put your knowledge on Popeye to test by ticking the right answers to the following questions and you could win an exciting Dash! watch.

1. What does Popeye do for a living? He's à
   a. Sailorman ☐ b. Tailorman ☐
   c. Cobblerman ☐

2. What's Popeye's source of strength?
   a. Roast Beef ☐ b. Hotdogs ☐
   c. Spinach ☐

3. What's Popeye's girlfriend's name?
   a. Olive Oyl ☐ b. Coconut Oyl ☐
   c. Sunflower Oyl ☐

**Now dash this contest form to:**
The Dash! Chandamama Contest,
Titan Industries Ltd, Airport Road,
Bangalore-560 017.

**My name is:** ______________________
**I am a Boy ☐ Girl ☐. I am ______ years old**
**My address is:** ______________________
______________________
**Tel:** ______________________
**I read Chandamama in English ☐ Hindi ☐**
**Others ☐ (Please specify)** ______________

**Rules and regulations:**
1. Judges decision is final and binding.
2. Incomplete forms will not be considered.
3. Prizes are not exchangeable in lieu of cash.
4. All entries should reach us by 15th May 2002.



Rs. 295 onwards.

DASH!

Wow watches from Titan



# பார் வேடிக்கையை!

சத்தியநாதன் பிறரைச் சீண்டி அவர்கள் மனம் குமுறுவதைக் கண்டு மகிழ்பவன். ஒரு நாள் அவன் தெருவில் போய்க் கொண்டிருந்த போது ஒரு பிச்சைக்காரன் அவனைப் பார்த்து, ''மகாராஜா! ஏதாவது தர்மம் போடு'' என்றான்.

சத்தியநாதன் அவனைச் சீண்டி வேடிக்கை பார்க்க எண்ணி, ''ஐயா! நானா மகாராஜா? இல்லை. உங்கள் முகத்தில் தான் ராஜகளை சொட்டு கிறது. என்னோடு வாருங்கள். உங் களை மகாராஜாவாக்கிக் காட்டு கிறேன்,'' என்று குழைந்தான்.

பிச்சைக்காரனும் அவனைப் பல விதமாய் வாழ்த்தி அவனோடு சென் றான். சத்தியநாதன் அந்தப் பிச்சைக் காரனுக்கு நல்ல ஆடைகளைக் கொடுத்து உடுத்தச் சொன்னான்.

பிறகு அவன் அந்தப் பிச்சைக்கார னோடு வீட்டிலிருந்து வெளியே வந்து தெருவில் சென்றான். அப்போது ஒருவனிடம் தன்னுடன் வந்த பிச் சைக்காரனைக் காட்டி, ''இவர் இந் நாட்டு மன்னர். மாறுவேடத்தில் வந்திருக்கிறார். உன் கஷ்டங்களைச் சொல். அவற்றைப் போக்கிவிடு வார்!'' என்றான்.

அந்த வீட்டுக்காரனும், ''மகா ராஜா! எனக்கு ஓர் ஆயிரம் வராகன் கொடுத்தால் என் கஷ்டங்கள் தீர்ந்து விடும்,'' என்று வேண்டினான்.

சத்தியநாதன் அப்போது, ''கவ லைப்படாதே! நாளை நம்மூர் சத் திரத்திற்கு வா! மன்னர் உனக்கு ஆயி ரம் வராகன்கள் கொடுப்பார்,'' என்று கூறிவிட்டு, பிச்சைக்காரனுடன் அங் கிருந்து சென்றான்.

- எஸ். சோபினி -

அடுத்து சத்தியநாதன் இன்னொரு வனிடம், ''என்னோடு இருப்பவர் நம் மன்னர். மாறுவேடத்தில் மக்களின் குறைகளை போக்கவே வந்திருக்கிறார். உனக்கு ஏதாவது சொல்ல இருக்கிறதா?'' என்று கேட்டான்.

அவனும், ''என் அண்ணனை காவலதிகாரி கைது செய்து வைத்துக் கொண்டு அவனை விடுவிக்க லஞ்சம் கேட்கிறார். இதற்கு தாங்கள் நியாயம் வழங்க வேண்டும்,'' என்றான். சத்தியநாதனும் ''நாளை நீ நம்மூர் சத்திரத்திற்கு வா. மன்னர் நியாயம் வழங்குவார்,'' என்றான்.

இதுபோலவே வழியில் நாலைந்து பேர்களிடமும் மறுநாள் சத்திரத்திற்கு வந்து மன்னரைக் காணும்படிக் கூறி விட்டுப் பிச்சைக்காரனைத் தன் வீட்டிற்கு அழைத்துப் போனான்.

வீட்டை அடைந்ததும் பிச்சைக்காரன் ''இப்படிச் செய்வதால் உனக்கு என்ன கிடைக்கிறது?'' என்று கேட்கவே, சத்தியநாதனும் ''ஆனந்தம் தான். நாளை சத்திரத்திற்கு வந்து பார் வேடிக்கையை!'' என்று கூறி அவனது கந்தல் துணியையும் கப்பரையையும் கொடுத்து விரட்டி விட்டான்.

மறுநாள் சத்தியநாதன் வேடிக்கைப் பார்க்கச் சத்திரத்திற்குச் சென்றபோது அங்கு உண்மையிலேயே மன்னர் இருந்தார். முன்தினம் தம் குறைகளைக் கூறியவர்களை சத்தியநாதன் கண்டான். மன்னரும் அவர்களது குறைகளைக் கேட்டு அவற்றைப் போக்கிக் கொண்டிருந்தார். அதைக் கண்டு திகைத்த சத்தியநாதன் முன்தினம் தான் கண்ட பிச்சைக்காரன் மாறுவேடத்தில் வந்த மன்னனே எனத் தெரிந்து கொண்டான்.

மன்னரும் சத்தியநாதனைத் தன்னருகே அழைத்து, ''இனி பார் வேடிக்கையை!'' என்றுகூறி, காவல் வீரர்களை அழைத்து, ''மக்களைத் துன்புறுத்தி வேடிக்கை பார்க்கும் இவனை சிறையில் தள்ளுங்கள்,'' என்றார்.





# மர்மக் குளம்

## 3

(ஜெயசீலன் தன் சக்தியால் சேனாதிபதியின் மகன் மங்களவர்மனைப் புலிகளிடமிருந்து காப்பாற்றினான். அதுகண்டு மன்னன் கனகாட்சன் மகிழ்ந்து மந்திரியாரின் யோசனையின் பேரில் அவனுக்கு ஓர் உத்தியோகத்தைக் கொடுத்தான். ஜெயசீலனைப் பற்றி மந்திரி கூறிக் கொண்டிருக்கையில் ஒரு வீரன் உடைந்த கத்தியையும், ஒரு முத்து மாலையையும் மன்னன் முன் வைத்தான். அப்போது -)

மன்னன் கனகாட்சனும் மந்திரி தருமமித்திரரும் வீரன் கொண்டு வந்த உடைந்த கத்தியையும் முத்து மாலையையும் பார்த்துவிட்டு அவை இளவரசனதும், இளவரசியுடையதும் தானா என்று எப்படி அடையாளம் கண்டு கொள்வது என்று யோசிக்கலானார்கள். அப்போது தருமமித்திரர் ஏதோ நினைவிற்கு வந்தது போல ''உடைந்த கத்தியைப் பார்த்து அது இன்னாருடையது என்று சொல்லி விட முடியாது. ஆனால் முத்துமாலை இளவரசியுடையதுதானா எனக் கண்டுபிடித்துவிடலாம். அந்தப்புரத்திலிருந்து இளவரசியின் முக்கிய பணிப்பெண்ணை வரவழைத்துக் கேட்கலாம்,'' என்றார்.

மன்னனும் ஒரு வீரனை அழைத்து, ''நீ அந்தப்புரத்திற்குப் போய் இளவரசியின் முக்கிய பணிப் பெண்ணை இங்கு அழைத்து வா. இது என் கட்டளை என்றும் தெரிவி!''



என்றான். வீரனும் உடனே போய் அந்தப் பணிப்பெண்ணைஅழைத்து வந்தான்.

தருமமித்திரரும் அவளிடம், ''இந்த முத்துமாலையை நீ பார்த்திருக்கிறாயா?'' என்று கேட்டார். அவளும் மாலையை வாங்கிப் பார்த்த மறுவிநாடியே ''இது இளவரசியினுடைய முத்துமாலை. இதோ இந்த நடுமுத்து அதுங்கி இருக்கிறது. இதை நான் கவனித்திருக்கிறேன். அதனால் இது இளவரசியுடையதே என்று என்னால் உறுதியாகக் கூற முடியும்,'' என்றார்.

அதைக் கேட்டு மன்னனும் மந்திரியும் முத்துமாலை இளவரசியினுடையது தான் என்பதை உறுதி செய்து கொண்டார்கள். உடைந்த வாளும் இளவரசனுடையதாகத் தான் இருக்க வேண்டும் என்பதையும் அவர்கள் நம்பினார்கள். அப்போது மன்னன், ''இந்த வாளையும் முத்துமாலையையும் கண்டெடுத்த வேடன் என்ன ஆனான்?'' என்று கேட்டான்.

அந்த இரு பொருள்களையும் கொண்டு வந்த வீரன் ''பிரபுவே! அந்த வேடனால் சரியாகப் பேசக் கூட முடியவில்லை. இரண்டு கால் முதலை என்று அடிக்கடி கூறிக் கொண்டே இருக்கிறான்,'' என்றான்.

அப்போது சித்தசாதகன், ''அரசே! மகாகாலனின் ஆட்களில் சிலர் அவ்வப்போது விசித்திர உருவங்கள் எடுத்து நடமாடுவது உண்டு. அந்த வேடன் இத்தகைய ஓர் உருவத்தைக் கண்டு தான் மிரண்டு போயிருக்கிறான். என்னையும் ஜெயசீலனையும் அவனைக் கண்டு பேசி விஷயம் அறிய அனுப்புங்கள்!'' என்றான்.

மன்னனும் அதற்கு அனுமதி அளிக்கவே, ஜெயசீலனும் சித்தசாதகனும் முத்துமாலையையும் உடைந்த வாளையும் கொண்டு வந்த வீரனைக் கூட்டிக் கொண்டு வேடன் இருந்த இடத்திற்குச் சென்றார்கள்.

அந்த இடத்தில் இருந்த பெரிய மரத்தின் கீழ் பல வேடர்கள் கூடி இருந்தனர். அவர்களிடையே இருந்த ஒரு வேடனை ஒரு மந்திரவாதி வேப்பிலையால் அடித்து, ''ஓம், க்ரீம், ஹ்ரீம்!'' என்று ஏதேதோ மந்திரங்களை உரத்த குரலில் உச்சரித்துக் கொண்டிருந்தான்.

தன் கையிலிருந்த கோலால் அந்த வேடனை அடித்தவாறே, ''வா, வா! இறங்கி வா! இப்படித் தான்! இங்கே

தான்!'' என்று கூவினான் சித்த சாதகன். அதைக் கண்ட வேடுவ மந்திரவாதி கோபம் கொண்டு சித்த சாதகனை அடிக்கப் பாயவே, அரசாங்க வீரன் அவனைத் தடுத்து, ''ஏய்! வேப்பிலைப் பூசாரி! இவர் அரசாங்க மந்திரவாதி. நீ எதுவும் செய்யாதே! செய்தால்...'' என்று எச்சரித்தான்.

சித்தசாதகனும், ''ஏய் வேப்பிலை! உன் வேலைத்தனத்தை என்னிடம் காட்டாதே! உன்னைப் புல்லாக்கி என் சுண்டு விரலில் சுற்றிக் கொண்டு விடுவேன். வாலைச் சுருட்டிக் கொண்டு பேசாமல் இரு!'' என்று கோபமாகக் கூறினான். அதுகேட்டு வேப்பிலைப் பூசாரி நடுநடுங்கினான்.

சித்தசாதகன் அவனை அலட்சிய மாகப் பார்த்தவாறே வேப்பிலையால் அடிபட்ட வேடனிடம், ''அடே சூரப்புலி! நீ பார்த்த இரண்டு கால் முதலையை இந்த மாவீரன் ஜெய சீலன் தன் வாளால் குத்திக் கொன்று விட்டான். இனி நீ பயப்படாதே!'' என்று கூறி ஜெயசீலன் வைத்திருந்த வாளை எடுத்துக் காட்டினான்.

அந்த வேடனும் எழுந்து நின்று, ''ஐயா! அந்தப் பிசாசைக் கொன்று விட்டீர்களா? அதன் உடல் எங்கே கிடக்கிறது?'' என்று ஆவலுடன் கேட்டான்.

சித்தசாதகன் ''பிசாசு மனிதன் அல் லவே. அதனால் இறந்ததும் அதன் உடல் காற்றோடு கலந்துவிட்டது. அது சரி, நீ முத்து மாலையையும் உடைந்த கத்தியையும் எங்கிருந்து



எடுத்தாய்?'' என்று கேட்டான்.

அவனும் ''ஐயா! நான் காட்டில் வேட்டையாடிக் கொண்டிருந்தேன். அதோ தெரியும் மரத்தில் ஒரு காட்டுக் கோழி இருந்து கூவவே, அதை நான் அம்பு எய்து அடித்தேன். அது அடிபட்டு சற்று தூரத்திலுள்ள புதரில் விழுந்தது,'' எனக் கூறி ஜெய சீலனையும் சித்தசாதகனையும் அழைத்துக் கொண்டு போய் அந்தப் புதரைக் காட்டினான்.

சித்தசாதகன் அந்தப் புதரைக் கூர்ந்து பார்த்து, ''ஆ! ஏதோ ஓலைச் சுவடி கிடக்கிறதே!'' என்று கூறி கைவிட்டு ஓர் ஓலைச் சுவடியை எடுத்தான். அதுகண்டு ஜெயசீலன் ஆச்சரியப்பட்டான்.

சித்தசாதகனோ ஓலைச் சுவடியின் கட்டை அவிழ்த்து ஓலைகளை ஒவ் வொன்றாகத் திருப்பிப் பார்த்தவாறே,




''இது எந்த மொழி? புரியவில்லையே!'' எனக் கூறினான்.

ஜெயசீலனும் அதை வாங்கிப் பார்த்துவிட்டு ''இது ஒரு வேளை அந்த இரண்டு கால் முதலை தான் கொண்டு வந்து போட்டிருக்கும்,'' என்றான். சித்தசாதகனும் ''இருந்தாலும் இருக்கலாம்,'' எனக் கூறி விட்டு வேடனிடம், ''அந்த இரண்டு கால் முதலை இங்கே ஏன் வந்தது?'' என்று கேட்டான்.

வேடனும் ''அது எனக்குத் தெரியாது. நான் அடித்து வீழ்த்திய பறவையை எடுக்க இந்த புதரினுள் பார்த்த போது இதில் அந்த இரண்டு கால் முதலை உருவத்தைக் கண்டு பயந்து அலறியவாறே நினைவிழந்து விழுந்துவிட்டேன்,'' என்றான்.

அப்போது ஜெயசீலன் அவனைத் தட்டிக் கொடுத்து, ''நீ அடித்து வீழ்த்திய பறவை என்ன ஆயிற்று?'' என்று கேட்டான்.

வேடன் பதில் சொல்வதற்குள் வேப்பிலைப் பூசாரி குறுக்கிட்டு, ''அதை மலைத் தேவதை தூக்கிக் கொண்டு போயிருக்கும். அதை அடித்துப் பெரும் பாவத்தை இவன் அடைந்துவிட்டான்,'' என்றான்.

ஜெயசீலன் அவன் பேசாதிருக்க வேண்டும் என்று கூறிவிட்டு சித்த சாதகனிடம் ''அந்த இரண்டு கால் முதலை எங்கே இருக்கிறது என்று நாம் தேடிப் பார்க்கலாம்,'' என்றான்.

சித்தசாதகனும், ''இந்த ஓலைச் சுவடியை இங்கே தவறவிட்டவன் தான் இளவரசனையும் இளவரசியையும் கவர்ந்து கொண்டு போய் இருக்க வேண்டும். அவன் ராட்சஸனோ, யட்சனோ, கந்தர்வனோ அல்லது கின்னரனோ?'' என்றான்.

ஜெயசீலன் தன்னுடன் வந்த வீரனைத் தலைநகருக்குப் போகச் சொல்லிவிட்டு சித்தசாதகனுடன் காட்டில் இரண்டு கால் முதலையைத் தேடலானான். அது அடர்ந்த காடுகள் நிறைந்த மலைப் பகுதி. அவர்கள் இருவரும் அப்பகுதியில் சென்று கொண்டிருக்கும்போது ஒரு கிராமத்தை அடைந்தார்கள்.

அந்த கிராமத்து மக்கள் ஓரிடத்தில் கூடி ஏதோ பேசிக் கொண்டு பயந்தவாறே அங்கும் இங்கும் பார்ப்பதை ஜெயசீலன் கவனித்தான். உடனே அவன் அதற்கு என்ன காரணம் என்று கேட்கவே, ஒரு கிராமவாசி கூறலானான்.

''இந்த ஊரை ஒட்டிய ஒரு சோளக் காட்டைக் காவல் காக்க பதினான்கு வயது சிறுவன் ஒருவன் அங்கு கட்டியிருந்த காவல் பரண் மீது நின்று இன்று காலையில் சுற்றிலும் பார்த்த போது ஒரு பெரிய யானை வந்து கொண்டிருப்பதைக் கண்டான். அது சோளக் காட்டில் நுழைந்து பயிரை நாசப்படுத்திவிடுமே என எண்ணி அதைப் பயமுறுத்தி விரட்ட ஒரு கூரிய கருங்கல்லை எடுத்து அதற்குக் குறி வைத்து எறிந்தான். அது யானையின் மீது பட்டது.

அப்போது திடீரென யானை மீது ஒருவன் தோன்றி, ''அடே! யாரடா அது கல்லை விட்டெறிந்தது?'' என்று கோபத்தோடு கேட்டான். அக்குரலைக் கேட்ட சிறுவன் நடுங்கிப் போனான். பயத்தால் என்ன செய்வது எனத் திகைத்து அவன் பரண் மீதே நின்றான்.

இரண்டொரு நிமிடங்களில் யானை அவனை அணுகியது. அது எல்லா யானைகளைப் போல இருக்க வில்லை. அதன் காதுகள் மீனின் செதில்கள் போல இருந்தன. அதன் மீது இருந்தவனின் தலைப் பாகை ஒரு முதலையின் தலை போல இருந்தது. கரடுமுரடான முதலையின் உடல் போல அவனது உடல் இருந்தது.

அந்த மனிதன் சோளக் காட்டைக் காவல் காக்கும் சிறுவனை அணுகினான். அவன் சிறுவனிடம், ''பயப் படாதே! நீ போய் உன் கிராம வைத்தியனை அழைத்து வா. என் உடலில் குத்தி ஒடிந்திருக்கும் இந்தக்



கத்தியை வெளியே எடுக்க வேண்டும். இதற்காக நிறையப் பணம் கொடுக்கிறேன்,'' என்றான்.

சிறுவனும் அங்கிருந்து தப்பி ஓட வழி ஏற்பட்டது கண்டு பரணிலிருந்து குதித்து வேகமாக ஓடி வந்து கிராமத்தை அடைந்தான். அவன் வேகமாக ஓடிவந்ததைப் பார்த்த சிலர், ''சின்னா! என்ன சமாச்சாரம்? ஏன் இப்படித் தலைதெறிக்க ஓடி வருகிறாய்? சோளக் காட்டிற்குள் ஏதாவது கொடிய மிருகம் புகுந்து விட்டதா?'' என்று கேட்டார்கள். அவனும் வாய் குழறித் தட்டுத் தடுமாறியவாறே நடந்ததைக் கூறினான். அதை முதலில் யாரும் நம்ப வில்லை. ஆனால் சிலர் அவன் ராட்சஸனோ என நினைக்கிறார்கள்.''

இவ்வாறு அவன் ஜெயசீலனிடம் சொல்லி முடித்தபோது அந்த கிரா



மத்துத் தலைவன், ''அந்த விசித்திர மனிதனுக்கு இப்போது ஒரு வைத் தியர் தேவை. எனவே நம்மூர் வைத்தியரைக் கூட்டிக் கொண்டு அங்கே போகலாம்!'' என்றான்.

வேறு சிலரும், ''அவன் கோரிய படியே நம் ஊர் வைத்தியரை அழைத்துக் கொண்டு போகலாம். அவனுக்குச் சிகிச்சை செய்தால் அவன் நமக்கு நன்றி செலுத்து பவனாய் நம்மை ஒன்றும் செய்ய மாட்டான். இப்படிச் செய்வதே நம் ஊருக்கும் நல்லது. அவனுக்கும் நல்லது. எனவே யோசனை செய்து கொண்டிருக்காமல் இப்போதே நம் ஊர் வைத்தியரை அழைத்துக் கொண்டு அவன் இருக்கும் இடத் திற்குச் செல்வோம்,'' என்றார்கள்.

கிராம வைத்தியரோ, ''ஒரு ராட் சஸனுக்கா நான் வைத்தியம் செய்ய வேண்டும்? முடியாது! எனக்கு பய மாக இருக்கிறது,'' என்றான்.

கிராமத் தலைவனும், ''பயப் படாதே! நாங்கள் எல்லோரும் உன் கூட வருகிறோம். எல்லோரும் அரிவாள், கடப்பாரை, கோடாலி என்று கைக்குக் கிடைத்ததை எடுத்துக் கொண்டே வருகிறோம். நம்மால் ஓர் உயிரைக் காப்பாற்ற முடியுமானால் மனிதாபிமானம் காட்டி அதைச் செய்யலாம். ஆனால் அங்கிருப் பவன் ராட்சஸனாக இருந்து நம்மைத் தாக்க முயன்றால் நாம் எல்லோரு மாகச் சேர்ந்து அவனை அடித்துக் கொன்று விடலாம்,'' என்றான்.

அதைக் கேட்டு எல்லோரும் உற்சாகத்துடன் 'அப்படியே செய் யலாம்!' என்று கூவினார்கள். உடனே யாவரும் தம் கைக்குக் கிடைத்த அரிவாள், கோடாரி, கடப்பாரை என எடுத்துக் கொண்டு வந்தார்கள். எல் லோரும் சோளக் காட்டை அடைந் தார்கள்.

ஜெயசீலனும் சித்தசாதகனும் அங்கு நடப்பதை எல்லாம் உன் னிப்பாக கவனித்தார்கள். சித்தசாதகன் அப்போது, ''ஜெயசீலா! இவர்கள் எல்லோரும் அந்த விசித்திர மனி தனைக் காண சோளக் காட்டிற்குப் போகிறார்களே! அவன் யாராக இருப் பான்? யாரோ அவனை வாளால் தாக்கிக் குத்தி இருக்கிறார்கள். அவன் தாக்குதலில் இருந்து தப்ப முயன் றிருக்கிறான். அப்போது அந்த வாள் உடைந்து ஒரு பாதி அவனது உடலில் இருந்துவிட்டது. மற்ற பாதி எங்கோ

விழுந்துவிட்டது,'' என்றான்.

ஜெயசீலனும், ''சித்தா! இவ்வளவு ஊகித்த உனக்கு மேலும் என்ன நடந்திருக்கும் என்று நினைத்துப் பார்க்க முடியவில்லையா? ஆச் சரியமாகத் தான் இருக்கிறது? இந்த முதலை மனிதன் தான் நம் இள வரசனையும் இளவரசியையும் சிறைப்பிடித்துக் கொண்டு போயி ருக்க வேண்டும். அப்போது நடந்த கைகலப்பில் இளவரசர் தம் வாளால் அவனைத் தாக்கி இருக்கிறார். அத்தாக்குதலில் தான் இளவரசரின் வாள் உடைந்திருக்கிறது. தாம் சிறைப்பட்டோம் என்பதைத் தெரி விக்கவே இளவரசி தன் முத்து மாலையைக் கழற்றி எறிந்திருக்க வேண்டும். உடைபட்ட கத்தியாலும், எறியப்பட்ட முத்துமாலையாலும் இளவரசனையும் இளவரசியையும் எங்கு பிடித்தார்கள் என்பது தெரிந்து விட்டது. இனி அந்த இடத்திற்குப் போய் வேறு ஏதாவது புதுத் தட யங்கள் கிடைக்கின்றனவா என்று பார்ப்போம். இப்போது இந்தக் கூட்டத்தோடு சோளக் காட்டிற்குப் போய் அந்த முதலை மனிதனைப் பார்ப்போம்,'' என்றான். சித்த சாதகனும், ''அப்படியே செய்ய லாம். நீ கூறியபடித் தான் நடந்திருக்க வேண்டும். இவன் தான் நம் இள வரசனையும் இளவரசியையும் கடத் திக் கொண்டு போனவன் என் பதில் சந்தேகமே இல்லை. இவன் முதலை மனிதன் போல இருப்பது கண்டு பயந்து போய்த் தான் அந்த வேடன் அப்படிப் புலம்பிக் கொண்டிருந் தான். இவனது சக்தி என்ன என்பதைக் கண்டு கொள்ள வேண்டும்,'' என் றான். அதன்பின் இருவரும் கூட்டத் தோடு சேர்ந்து சோளக் காட்டிற்குச் சென்றார்கள்.

ஒரு பெரிய கூட்டமே தன்னை நோக்கி வருவதைக் கண்டு யானை மீது அமர்ந்திருந்தவன் யானையை அவர்களிருக்கும் இடத்திற்குப் செல் லும்படிக் கட்டளை இட, யானையும் துதிக்கையைத் தூக்கியவாறே பயங் கரமாய் ஓடி வந்தது.

(தொடரும்)



# நீரில் முழுகிவிடுவேனா?

குளத்துப்பாளையம் வயல்களால் சூழ்ந்து பெரிய கால்வாயையும் அதை அடுத்து ஒரு ஏரியையும் கொண்டது. அந்த ஏரியில் எல்லோரும் குதித்து நீந்தி விளையாடி வந்தார்கள். அவ்வூர்க்காரர்கள் யாவருக்கும் நீச்சல் தெரியும். ஆனால் பனையப்பன் என்பவனுக்கு மட்டும் நீந்தத் தெரியாது. நீந்தக் கற்றுக் கொள் என்று பலர் அவனிடம் சொன்னபோதெல்லாம் அவன் அலட்சியமாக, ''நான் ஏன் கற்க வேண்டும்? என் உயரமோ ஆறரை அடி. இந்த ஊர் கால்வாயிலும் ஏரியிலும் எங்கு இறங்கினாலும் ஐந்தடி ஆழத்திற்கு மேல் நீர் இல்லை. அதனால் நீரில் முழுகிவிடுவேனோ என்ற பயமே எனக்கு இல்லை,'' என்று கூறி வந்தான்.

ஒருமுறை அவன் ஏரிக்கரை மீது போய்க் கொண்டிருந்தபோது கால் வழுக்கி ஏரிக்குள் விழுந்துவிட்டான். பயந்து போய் தான் இனி நீரில் மூழ்கி இறந்து போகத்தான் வேண்டுமோ என எண்ணித் தன் உயிரைக் காத்துக் கொள்ள கையையும் காலையும் ஆட்டி, ''யாராவது வந்து காப்பாற்றுங்களேன்!'' என்றும் கூவினான். ஆனால் யாரும் வரவில்லை.

அப்போது அவனுக்கு ஒரு விஷயம் நினைவிற்கு வந்தது. உடனே அவன் ஏரியில் எழுந்து நிற்கவே, நீர் மட்டம் அவனது கழுத்தளவிற்கே இருந்தது. அவன் சிரித்துக் கொண்டே தனக்குத் தானே, ''நீரில் நான் முழுகிவிடுவேனா, என்ன?'' என்று பெருமையாகக் கூறிக் கொண்டான்!



நவீன
வேதாளக்
கதை

# வீடு திரும்பு!

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்து வேதாளம் எள்ளி நகைத்து, ''மன்னனே! இந்த பயங்கர நடுநிசியில் ஏதோ ஒரு வேலையை சிரமப்பட்டு விடாமல் தொடர்ந்து செய்ய முயல்கிறாயே! இது கடைசி வரை நீடிக்குமா? ஒரு வேளை



பாதியில் நின்றுவிடலாம். இதை விளக்க விசுவநாதன் என்பவனைப் பற்றிய கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்!'' என்று கூறிக் கதை சொல்லலாயிற்று.

உதயகிரி என்ற நகரில் உத்தம குப்தன் என்ற பணக்காரன் தன் மனைவி உமையாளுடன் வாழ்ந்து வந்தான். தெய்வ பக்தி நிறைந்த அத் தம்பதிகளுக்கு விவாகமாகி ஐந்தாறு ஆண்டுகளுக்குப் பிறகே ஒரு பெண் குழந்தை பிறந்தது.

அதற்கு விசாலாட்சி எனப் பெய ரிட்டு அத்தம்பதிகள் அருமை பெருமையாக வளர்த்து வந்தார்கள். ஆனால் அந்தப் பெண் ஐந்தாவது வயதிலேயே உடல் உபாதைகளுக்கு ஆளானாள். உண்ட உணவு ஜீரணமாக வில்லை. எதையும் உண்ண மனம் விரும்பவில்லை. மாலை வேளை களில் அவளுக்குத் தலைவலி ஏற் பட்டு வந்தது. இவற்றைக் குணப் படுத்த எவ்வளவோ வைத்தியர்கள் வந்து பார்த்து மருந்துகள் கொடுத்த போதும் எந்த விதமான பலனும் கிட்டவில்லை.

வைத்தியர்களால் செய்ய முடியா ததை முனிவர்களாலோ அல்லது யோகிகளாலோ செய்ய முடியும் என எண்ணி உத்தமகுப்தன் காட்டிற்குள் போய் அபயானந்தர் என்ற முனி வரைக் கண்டான். அவ ரும், ''பெண் குழந்தை உனக்குப் பிறந்ததும் நீ தெய்வத்தை மறந்து விட்டாய். அவள் தெய்வத்திடம் பக்தி கொள்ளும்படிச் செய்! தாய், தந்தையரைவிட தெய் வமே உயர்ந்தது என்ற எண்ணத்தை நன்கு பதியும்படி செய். அவள் குணமடைந்துவிடுவாள்,'' எனக் கூறி அனுப்பினார்.

உத்தமகுப்தனும் அங்கிருந்து தன் வீட்டிற்கு வந்து விசாலாட்சிக்கு தெய்வ பக்தி ஏற்பட எல்லா ஏற் பாடுகளையும் செய்தான். இதனால் அவள் மனதில் கடவுள் பக்தி மிக ஆழமாகப் பதிந்துவிட்டது. எப்போ தும் கடவுளைப் பற்றிய பாடல் களையே பாடினாள். தனக்கு எது கிடைத்தாலும் அதைக் கடவுளுக்கே அர்ப்பணிக்கலானாள். உண்பதற்கு எதைக் கொடுத்தாலும் அவள் அத னைக் கடவுளின் பிரசாதம் எனக் கருதி சாப்பிட்டாள்.

ஒரே மாதத்தில் அவளது நோய் களெல்லாம் போய்விட்டன. ஆனால்

எப்போதும் தெய்வ சிந்தனையில் மூழ்கி இருக்கலானாள். அதைக் கண்ட உத்தம குப்தன் அவளுக்குத் திருமணம் செய்து வைத்துவிட்டால் இல்வாழ்க்கையில் ஈடுபட்டுவிடு வாள் என எண்ணி அதுபற்றி அவ ளிடமே பேசினான்.



அவளோ தான் திருமணமே செய்து கொள்ளப் போவதில்லை என்று கூறிவிட்டாள். அதனால் உத்தமகுப்தன் முனிவரை மீண்டும் கண்டு தன் பிரச்சினையைக் கூறி னான். அவரும் தானே வந்து அவ ளுக்கு அறிவுரை கூறுவதாகச் சொல்லி அவனுடன் அவன் வீட் டிற்குச் சென்றார்.

அபயானந்தரும் விசாலாட்சி யிடம், ''பெண்ணே! பெண்ணாய்ப் பிறந்தவள் திருமணம் செய்து கொண்டு, கணவனுடன் வாழ்ந்து, குழந்தைகளைப் பெற்று, அவர்களை நல்லவர்களாக்கிக் காட்ட வேண்டும். இதுதான் மானிட தர்மம். கடவுள் தம் படைப்பில் ஆணையும் படைக் கிறார். பெண்ணையும் படைக்கிறார். ஓர் ஆண், ஒரு பெண்ணை மணந்து கொண்டு இல்வாழ்க்கையை மேற் கொள்வதோடு தன் குடும்பத்தின் பெயர் விளங்க நல்ல குழந்தை களைப் பெற்று அவர்களை நல்லவர் களாக்கிக் காட்ட வேண்டும். இதைச் செய்யாவிட்டால் தெய்வம் கூட பொறுக்காது,'' எனப் பல அறிவுரை களைக் கூறினார்.

அவற்றைக் கேட்ட பின் அவள் திருமணம் செய்து கொள்ளச் சம் மதித்தாள். விரைவிலேயே அவளது திருமணம் நடந்தது.

இதற்கு ஓராண்டிற்குப் பின் ஓர் ஆண் குழந்தையைப் பெற்றெடுத் தாள். தெய்வாம்சம் கொண்டது என எண்ணி விசாலாட்சியும் அவள் கணவனும் அதற்கு விசுவநாதன் என்று பெயரிட்டனர். அவனும் தன் தாயின் அரவணைப்பில் தெய்வ பக்தி மிகவும் கொண்டான். தாயைப் போலவே எப்போதும் கடவுளைப் பற்றியே சிந்தித்தான். அவன் பக்திப் பாடல்கள் பாடிப் பரவசம் அடைந் தான். அதனால் உலகில் எதன் மீதும் அவனுக்குப் பற்றுதலே இல்லாமல் போயிற்று. அதனால் அவன் இக லோக வாழ்க்கையை வெறுத்து மோட்சம் அடைய வழி என்ன எனக் காணலானான்.

இதைக் கண்ட அவனது தந்தை தன் மனைவியிடம், ''நீ இந்தப் போக்கிலேயே உன் மகனை விட்டுவிட்டால் அவன் வாழ்க்கை பாழாகிவிடும். அவனை இவ்வளவு தெய்வ பக்தி கொள்ள உட்படுத்தாதே!'' என்று கூறினான்.

அதை ஏற்ற விசாலாட்சியும் தன் மகனிடம், ''ஒரேயடியாக தெய்வ பக்தியில் மூழ்கிக் கிடக்காமல் உலக விவகாரங்களிலும் பங்கு கொள்!'' என்று கூறினாள். அவன் அதை ஏற்கவில்லை.

ஊராரும் அவனிடம், அவனது தாயார் அறிவுறுத்தியபடியே நடக்கும்படிக் கூறினார்கள். அதையெல்லாம் கேளாமல் உலக வாழ்வின் மீது வெறுப்பு கொண்டு காட்டிற்குப் போய் ஒரு மரத்தின் கீழ் அமர்ந்து தவம் செய்யலானான். இப்படியே பத்து வருடங்கள் கழிந்தன. ஆனால் அவன் முன் கடவுள் தோன்றவில்லை.

ஒருநாள் காலையில் விசுவநாதன் ஏரியில் குளித்துக் கொண்டிருக்கும் போது ஒரு வேடன் ஒரு மானைத் துரத்தியவாறே அங்கு வந்தான். அவன் விசுவநாதனைப் பார்த்து, ''பரமேசுவரா! அன்று அர்ஜுனனுக்குத் தரிசனம் தந்தது போல இன்று எனக்குக் காட்சியளிக்கிறாயா? என் பாக்கியமே பாக்கியம்!'' எனக் கூறி அவன் முன் விழுந்து வணங்கினான்.

அதுகண்டு விசுவநாதன் ஏரியிலிருந்து கரைக்குவந்து, ''ஐயா! நீங்கள் என்னைவிட வயதில் மூத்தவர். என் முன் விழுந்து வணங்குவது முறையல்ல,'' என்றான். அதற்கு அவன், ''நீங்கள் ஈஸ்வரன். உங்கள் கழுத்தில் பாம்பு ஆபரணமாக



உள்ளது. உங்களை தரிசித்து தன்யனானேன்,'' எனக் கைகூப்பி வணங்கினான்.

அதைக் கேட்ட விசுவநாதன் திகைத்து நின்றான். அப்போது வேடன், ''ஈஸ்வரா! எனக்குக் காட்சியளித்த பின் மறைந்துவிட்டாயா?'' எனக் கூறியவாறே அங்கிருந்து சென்றுவிட்டான்.

விசுவநாதனோ, 'நானா கடவுள்? வேடனுக்குக் காட்சி தந்த அவர் எனக்குத் தென்படவில்லையே! அவரைக் கண்டு எனக்கு மோட்சத்தை அளிக்க வேண்டும் என்று வரம் கோரத் தானே இந்தப் பத்து ஆண்டுகளாகத் தவம் செய்தேன். ஆனால் அவர் என் முன் தோன்றாமல் ஒரு சாதாரண வேடனுக்குக் காட்சி அளித்தாரே!' என்று எண்ணி ஆழ்ந்து யோசித்தான்.

அதுபற்றி முனிவர்களிடம் கேட்பது எனத் தீர்மானித்து, அவன் அவர்கள் வசிக்கும் இடத்திற்குச் சென்றான். வழியிலேயே அவன் அபயானந்தரைக் கண்டுவிட்டான். அவர் கிழவராகிவிட்டதால் சட்டென விசுவநாதனை அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை.

விசுவநாதன் ஏரிக்கரையில் நடந்ததை எல்லாம் அவரிடம் கூறவே, அவரும், ''பிள்ளாய்! ஆண்டுக்கு ஒருமுறை கடவுள் எனக்குக் காட்சி அளித்து வருகிறார். கடந்த ஆண்டில் என்னால் கடவுளைக் காண முடியவில்லை. உதயகிரியிலுள்ள பரம பக்தையான விசாலாட்சியின் மகன்



விசுவநாதனைக் கண்டால் உன் பிரச்சினை தீரும் என ஒரு தேவதை என் கனவில் தோன்றிக் கூறியது. வயோதிகனாகிவிட்டபடியால் அவ்வூருக்குப் போய் அவனைக் காண முடியவில்லை. நீ அவனை எப்படியாவது சந்தித்துவிட்டால் உன் பிரச்சினையும் தீர்ந்துவிடும்,'' என்றார்.

அதைக் கேட்டு அவன் அபயானந்தர் கூட தன்னைக் கடவுளாகக் கண்டு வந்தார் என்றதைக் கேட்டு விசுவநாதன் ஆச்சரியம் அடைந்தான். தான் பத்து வருடங்களாகக் காட்டில் தவம் செய்து கொண்டிருக்கையில் கடந்த ஒன்பது ஆண்டுகளில் தன்னை அவரால் உதயகிரியில் எப்படிக் காண முடிந்தது என நினைத்து வியப்படைந்தான். தன் சந்தேகத்தை அவன் அவரிடம் தெரிவித்தான்.

அவரும் அவனை உற்றுப் பார்த்து விட்டு, ''நீ விசுவநாதன் தான். நீ பத்து ஆண்டுகளாகவா காட்டில் இருந்து தவம் செய்து கொண்டிருந்தாய்? அப்படியானால் அங்கே உன் உருவில் இருந்தவர் சாட்சாத் அந்தப் பரமேஸ்வரனே! தன் பரம பக்தையான உன் தாயாரின் மனம் நோகக் கூடாதே என்று தான் பரமேஸ்வரன் உன் உருவில் உன் வீட்டில் இருந்திருக்கிறார். இதை என்னால் அப்போது புரிந்து கொள்ள முடியவில்லை. ஒரு வேடன் வந்து உன்னை உன் வீட்டிற்குப் போக வழி செய்திருக்கிறான். அந்த வேடன் பரமேஸ்வரனே! நீ அவனைக் கடவுள் எனக் கண்டு கொள்ளாமல் போனாலும் தரிசித்துவிட்டாய்! இனி நீ வீட்டிற்குப் போய் உன் தாய்க்குப் பணிவிடை புரி!'' என்றார். விசுவநாதனும் அவரது அறிவுரையை ஏற்றத் தன் வீட்டிற்குச் சென்றான்.

வேதாளம் இக்கதையைக் கூறி, ''விசுவநாதன் கடுந்தவம் செய்து கடவுளை தரிசித்து மோட்சம் அடைய முயன்றானே! ஆனால் அபயானந்தர் கூறிய அறிவுரையைக் கேட்டு அவன் தன் வீட்டிற்குத் திரும்பிவிட்டானே! இது ஏன்? என் கேள்விக்குச் சரியான பதில் தெரிந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்குநூறாகிவிடும்,'' என்றது.

விக்கிரமனும், ''கடவுள் பக்தனுக்கு எந்த உருவிலும் வந்து காட்சி அளிப்பவர். தம் பக்தைக்கு அவளது மகனாக இருந்து காட்சி அளித்தார். விசுவநாதனுக்கு வேடன் உருவில் காட்சி அளித்தார். அபயானந்தரோ விசுவநாதனின் உருவில் கடவுளைக் கண்டார். அவரது அறிவுரையில் கடவுளை அவன் தாயின் உருவில் காண முடியும் எனக் கூறப்பட்டதால் அவன் தவம் செய்வதை விட்டுவிட்டு வீடு திரும்பித் தன் தாய்க்குப் பணிபுரிந்து அவளைக் கடவுளாகக் கண்டான்,'' என்றான்.

விக்கிரமனது சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



இந்தியப் புராதனக் கதைகள்

# விருந்து படைத்த வீணர்கள்




பல்லாயிரம் ஆண்டுகளுக்குமுன் இல்வலன், வாதாபி என்ற இரு ராட்சஸ சகோதரர்கள் இருந்தார்கள். அவர்களுக்கு மனிதர்களைக் கொன்று அவர்களது மாமிசத்தைச் சாப்பிடுவது தான் உணவு.

அவர்களுக்கு உருமாறத் தெரியும். அதைக் கொண்டு காட்டு வழியே யார் வந்தாலும் அவர்களை ஏமாற்றி அழைத்துப் போய் அவர்களைக் கொன்று சாப்பிட்டுவிடுவதோடு அப்பயணி அணிந்திருக்கும் விலையுயர்ந்த ஆபரணங்கள், பணம் ஆகியவற்றைச் சேர்த்து வைத்துக் கொண்டு வந்தார்கள்.

அவர்கள் பயணிகளை ஏமாற்றி அழைத்துச் செல்ல ஒரு தந்திரம் செய்து வந்தார்கள். இல்வலன் சாது போல வேடம் பூண்டு அக்காட்டு வழியே செல்பவனைச் சந்தித்து, ''ஐயா! நீங்கள் வெகுதூரம் நடந்து வந்திருக்கிறீர்கள். அதனால் களைத்துப் போய் பசியுடன் இருப்பது தெரிகிறது. இன்னமும் வெகுதூரம் நடந்து சென்றாலே ஓர் ஊரை அடைய முடியும். அதனால் நீங்கள் என் குடிலுக்கு வந்து தங்கி நான் கொடுக்கும் உணவை உண்டு இளைப்பாறி விட்டுப் பிறகு செல்லுங்கள்,'' என்று மிகவும் பணிவுடன் கூறி அழைத்துச் செல்வான்.

அங்கு வாதாபி ஓர் ஆடாக மாறி இல்வலனின் வருகையை எதிர்பார்த்தவாறு இருப்பான். இல்வலன் தன்னுடன் வந்த பயணியை இளைப்பாறச் சொல்லிவிட்டு வாதாபியான ஆட்டை வெட்டிச் சமைத்து பயணிக்கு உணவாகப் படைப்பான். பயணியும் சற்றும் சந்தேகப்படாமல் அந்த உணவை உண்டு இளைப்பாறிக்

- பாரதீயன் -



கொண்டிருக்கும் போது இல்வலன், ''வாதாபி! வெளியே வா!'' என்று கூப்பிடுவான். வாதாபியும் பயணியின் வயிற்றைக் கிழித்துக் கொண்டு ராட்சஸ உருவில் வெளியே வருவான். இறந்து கிடக்கும் பயணியின் உடலை அவ்விரு ராட்சஸர்களும் உண்டு களிப்பார்கள். பயணியின் விலையுயர்ந்த பொருள்களை எடுத்து பத்திரப் படுத்திவிடுவார்கள். இப்படியே அவர்கள் காட்டில் அவ்வழியே வந்தவர்களைக் கொன்று தின்று வந்தார்கள்.

அப்பகுதியிலுள்ள முனிவர்கள் இல்வலனையும் வாதாபியையும் எப்படி ஒழிப்பது என்று யோசித்தார்கள். அவர்கள் கூட்டம் கூடி ''அந்த இரு ராட்சஸர்களின் தொல்லை மிகவும் அதிகமாகிவிட்டது. அவர்கள் இருக்கும் இடத்தின் வழியாகச் சென்றவர்கள் யாரும் உயிருடன் திரும்பி வந்ததும் இல்லை. அவர்கள் என்ன தந்திரம் செய்து பயணிகளை மயக்கிக் கொண்டு போகிறார்கள் எனவும் தெரியவில்லை,'' என்று கூறினார்கள்.

அப்போது அகத்திய முனிவர், ''கவலைப்படாதீர்கள்! நான் அவர்கள் வசிக்கும் இடத்திற்குச் சென்று அவர்களை அழிக்கிறேன். அவர்களது மாயாஜாலங்களெல்லாம் என்முன் எடுபடாது,'' என்றார்.

அகத்தியர் இல்வலனும் வாதாபியும் வாழும் காட்டுப் பகுதிக்குச் சென்றார். அப்போது இல்வலன் அவ்வழியே யாராவது மனிதன் வருவானா என்று பார்த்துக் கொண்டே நின்றான்.

சாது வேடத்தில் நிற்பவன் தான் இல்வலன் என்பதை அகத்தியர் அறிந்து கொண்டுவிட்டார். இல்வலனோ அகத்தியர் வருவதைக் கண்டு மகிழ்ந்தானாயினும் அவரது குள்ள உயரத்தைக் கண்டு, ''இவன் மிகச் சிறியவனாக இருக்கிறானே! நானும் வாதாபியும் உண்ண இவனது உடல் மாமிசம் போதாதுதான். ஆனாலும் பரவாயில்லை. கிடைத்தது லாபமே!'' என எண்ணி அகத்தியரை அணுகினான்.

எல்லாப் பயணிகளிடமும் கூறுவது போல அவன் அகத்தியரிடமும், ''ஐயா! நீங்கள் மிகவும் களைத்துப் போயிருப்பது தெரிகிறது. நீங்கள் என் குடிலுக்கு வந்து தங்கி, உணவு உண்டு

இளைப்பாறிவிட்டு உங்கள் பயணத்தைத் தொடரலாமே!'' எனக் கூறினான். அகத்தியரும், ''ஆகா! பசித்து வரும் பயணிக்கு உணவு அளிப்பதால் உனக்கு நிறையப் புண்ணியம் கிடைக்கும். நானும் களைத்துப் போய் பசியுடன் இருக்கிறேன். அதனால் உன்னுடன் வருகிறேன்!'' எனக் கூறி அவனுடன் சென்றார்.

அவனது குடிலில் கட்டப் பட்டிருந்த கொழுத்த ஆட்டைக் கண்ட அகத்தியர் வாதாபி தான் அந்த உருவில் இருக்கிறான் என்பதை அறிந்து கொண்டார்.

அகத்தியர் குடிலில் அமர்ந்தார். இல்வலன் ஆட்டை இழுத்துப் போய் வெட்டி அதன் மாமிசத்தைச் சமைத்து அகத்தியருக்கு உண்ணக் கொடுத்தான். அகத்தியரும் அதனை உண்டார். சற்று நேரத்தில் வயிற்றில் ஒருவகைச் சுழற்சி ஏற்படுவது கண்டு அவர் தம் வயிற்றைத் தடவிக் கொடுத்தார். மறுநிமிடம் வயிற்றுள் சென்ற மாமிசம் ஜீரணமாகிவிட்டது.

வழக்கம் போல இல்வலன், ''வாதாபி! வெளியே வா!'' எனக் கூவினான். வாதாபி வராதது கண்டு மறுபடியும் ''உடனே வெளியே வா, வாதாபி!'' என்று அவன் கூவினான். அப்போதும் அவன் வராதது கண்டு அவன் அகத்தியரை முறைத்துப் பார்த்தான்.

அகத்தியரோ புன்சிரிப்புடன், ''வாதாபி இனி எங்கே வரப் போகிறான்? அவன் தான் என் வயிற்றில் ஜீரணமாகிவிட்டானே!'' என்றார்.

அதைக் கேட்டு இல்வலன் நடு நடுங்கி அகத்தியரின் கால்களில் விழுந்து, ''என்னை ஒன்றும் செய்யாதீர்கள். இனிமேல் நான் யாருக்கும் தீங்கு இழைக்கமாட்டேன்!'' என்று கூறினான். அகத்தியரும் ''இனிமேல் உனக்கு இதுவரை இருந்த மாயமந்திர சக்தி இராது. இனிமேல் திருந்தி நல்லவனாக ஆகிவிடு. யாரையும் துன்புறுத்தாதே!'' என்று அறிவுரை கூறினார். இல்வலனும் அப்போது முதல் நல்லவனாக மாறிவிட்டான்.



# நம் இந்தியா

## வினாக்கள்

**கோடை விடுமுறை வந்துவிட்டது. இன்னும் 50 அல்லது 60 நாட்களுக்குப் பள்ளிப் புத்தகங்களைக் கையில் எடுக்கவே மனம் வராது. அதனால் இம்மாத வினாக்கள் நீங்கள் போக விரும்பும் இடங்களைப் பற்றித்தான் கேட்கப்படுகின்றன. அவற்றோடு தொடர்புடையவர்கள் பற்றியும் இருக்கும். சரியான விடைகளைத் தெரிந்து வைத்துக் கொண்டு சரி பாருங்கள்.**

1. கர்நாடகாவிலுள்ள குல்பர்க்கா ஒரு காலத்தில் ஒரு நாட்டின் தலைநகராக இருந்தது. அந்த நாடு எது? அதை யார், எப்போது நிறுவினார்?
2. ஒரு கால்வாய் இரு தீவுக் கூட்டங்களைப் பிரிக்கிறது. அக்கால்வாயின் பெயரையும் தீவுகள் கூட்டங்களின் பெயர்களையும் கூறுங்கள்.
3. இபன்படோடா என்ற அயல்நாட்டுப் பயணி கிழக்கிந்திய நகர் ஒன்றை அல்கடகா எனக் குறிப்பிட்டார். அதன் தற்போதைய பெயர் என்ன?
4. பிரபல எழுத்தாளர் ரட்யார்ட் கிப்ளிங் ஓர் இந்திய நகரில் பிறந்தார். அந்த நகரம் எது?
5. இந்திய பெருநகர் ஒன்று முன்பு ஷாஜஹானாபாத் என்ற பெயரைக் கொண்டிருந்தது. அதன் தற்போதைய பெயர் என்ன?
6. இன்னொரு நகர் அலிநகர் எனப் பெயர் பெற்றிருந்தது. அதன் தற்போதைய பெயர் என்ன?
7. பாண்டிய மன்னனின் தலைநகரின் வழியே ஓர் ஆறு பாய்ந்து கொண்டிருந்தது. அத்தலைநகரின் பெயரையும் ஆற்றின் பெயரையும் கூறுங்கள்.
8. ராமேஸ்வரத்திற்கும் இந்திய மற்ற பகுதிக்கும் இடையே கடல் நீர் உள்ளது. அந்நீர்ப் பகுதியின் பெயர் என்ன?

*(விடைகள் அடுத்த மாதம்)*

## ஏப்ரல் மாத வினாக்களின் விடைகள்

1. 1980 - ரோம்.
2. கிறிஸ்துவ மருத்துவக் கல்லூரி, வேலூர்.
3. சுதந்திர நாடு ஒன்றில்.
4. அப்போது இந்தியாவிலிருந்த கராச்சி.
5. கோதாவரி.
6. அ.பி. வாஜ்பாய்.
7. சிங்கம்.
8. தட்சிண கங்கோத்திரி.
9. ஹைதராபாத்தின் பீகம்பேட்.
10. அந்தமான் - நிகோபார் தீவுகளிலுள்ள ஜன நடமாற்றமற்ற தீவு.



# புகழ்வது ஏன்?

நாகசாமிக்கு அவ்வூரில் நாட்டு வைத்தியர் என்றே பெயர். ஆனால் அவனுக்கு தலைவலி, ஜலதோஷம் எனப்படுபவைகளுக்குத் தான் பச்சிலை வைத்தியத்தால் போக்கத் தெரியும். வேறு எந்த நோய்க்கும் மருந்து கொடுக்க அவனுக்குத் தெரியாது. ஆனாலும் அவனுக்கு ஊரில் நல்ல பெயர் இருந்தது. தினமும் இரண்டு மூன்று பேர்களாவது தலைவலி, ஜலதோஷம் எனக் கூறிக்கொண்டு வந்து நாகசாமியின் பச்சிலை வைத்தியத்தால் குணமடைந்து சென்றார்கள். அதற்காகப் பணமோ அல்லது வேறு எதுவோ அவர்கள் நாகசாமிக்குக் கொடுத்து விட்டுச் செல்வார்கள்.

நாகசாமியின் வீட்டிற்கு எதிரில் பாலுசாமி என்பவன் இருந்தான். அவன் மற்றவர்களுக்கு உதவும் குணம் படைத்தவன். யாராவது உதவி வேண்டி அவனிடம் வந்தால் அவன் தன்னிடம் உள்ளதைக் கொடுத்து அனுப்புவான். ஊரில் யார் வீட்டில் ஏதாவது விசேஷம் என்றால் அதில் கலந்து கொண்டு வேலைகளையும் செய்வான். அவன் ஊறுகாய் போட்டு விற்பதைத் தன் வியாபாரமாகக் கொண்டிருந்தான். அவனது ஊறுகாயை அந்த ஊர்க்காரர்கள் மட்டுமல்லாது சுற்றுப் பக்கத்து ஊர்க்காரர்கள் விரும்பி வாங்கி வந்தார்கள். அவன் தயாரித்து விற்கும் ஊறுகாயில் உப்பு, காரம், எண்ணெய் முதலியன சரியான விகிதத்தில் சேர்ந்து இருந்தன. இந்த விகிதாசார சேர்க்கையை பாலுசாமி பரம ரகசியமாகவே வைத்து வந்தான்.

பாலுசாமிக்குத் தன்னைவிடப் பேரும் புகழும் இருந்து வருவதைக் கண்டு நாகசாமி மனம் புழுங்கினான். இது நாளாக ஆக அவன் மனதில் பொறாமையாக வளர்ந்தது. பாலுசாமிக்கு ஏன் இவ்வளவு பேரும்

- கௌரிநாதன் -



தான் பணம் வாங்கிக் கொள்ளாமல் வைத்தியம் செய்தபோதிலும் தன்னைவிட பாலுசாமியை அதிகமாகப் புகழ்வது கண்டு நாகசாமி எரிச்சலே அடைந்தான். இப்படி இருக்கையில் ஒருநாள் நாகசாமிக்கு ஒரே தலைவலியாக இருந்தது. அதற்கான மருந்துப் பொடிகளும் அவனிடம் இருந்தன. அவற்றைச் சரியான அளவில் கலந்து உட்கொண்டால் உடனே தலைவலியே போய்விடும். அதற்கு சிறு தராசு தேவை. அது அவனிடம் இல்லை. பாலுசாமியிடம் ஒரு தராசு இருந்தது. அதைக் கேட்டு வாங்கி வரும்படி பாலுசாமியின் வீட்டிற்கு நாகசாமி தன் மகளை அனுப்பினான்.

நாகசாமியின் மகளும் பாலுசாமியின் வீட்டிற்குப் போய்விட்டு அவர் தராசு இல்லையெனக் கூறியதாகத் தெரிவித்தாள். மேலும் அவள் ''அவரது மனைவி தராசு வைத்து நிறுத்துக் கொண்டிருப்பதைப் பார்த்தேன். நமக்குத் தராசைக் கொடுக்க அவர் விரும்பவில்லை போலிருக்கிறது,'' என்றாள்.

எல்லோருக்கும் உதவும் உபகாரி எனப் புகழப்படும் பாலுசாமி ஏன் தனக்குத் தராசு கொடுத்து உதவ மறுக்கிறான் என எண்ணி நாகசாமி கோபம் கொண்டான். அதனால் அவனே பாலுசாமியின் வீட்டிற்குப் போனான். அப்போது பாலுசாமி தராசு கொண்டு எதையோ நிறுத்துக் கொண்டிருந்தான்.

நாகசாமி வருவதைக் கண்டு அவன்,

புகழும் வருகிறது என்பது பற்றி அவன் யோசித்து பாலுசாமியின் செய்கைகளை உன்னிப்பாகக் கவனித்து வரலானான்.

பாலுசாமி எப்போதும் சிரித்த முகத்தோடு இருந்தான். யாரையும் கண்டு முகம் சுளித்ததே இல்லை. ஆனால் தான் செய்யும் வியாபாரத்தில் மிகவும் கறாராக இருந்தான். விலையில் பேரம் பேசவிடுவது இல்லை. கடனுக்கும் யாருக்கும் கொடுப்பதும் இல்லை. அவன் பிறருக்கு உதவுவதும் தன் உடல் உழைப்பால் தான். பணம் கொடுத்தல்ல. நகருக்குச் செல்லும் யாராவது பணம் கொடுத்து ஏதாவது வாங்கிவரச் சொன்னால் அதை வாங்கிக் கொண்டு வந்து கொடுப்பான்.

''வாருங்கள்! நான் தராசு கொண்டு ஊறுகாய் தயாரிக்க மிளகாய்ப் பொடியை நிறுத்துப் போட்டுக் கொண்டிருந்தேன். அதை உடனேயே வேறு எதையும் நிறுத்தப் பயன் படுத்த முடியாததால் உங்கள் மகள் வந்து கேட்டபோது அதைக் கொடுப் பதற்கு இல்லை என்று கூறினேன். நீங்களோ வைத்தியர். நீங்கள் தராசைக் கேட்டால் அது மருந்து நிறுப்பதற் காகத் தான் இருக்கும் என ஊகித்துக் கொண்டேன். காரப் பொடியை நிறுக்கப் பயன்படுத்திவிட்டு அந்தத் தராசை மருந்து நிறுக்கக் கொடுப்பது சரியல்ல என்று தான் கொடுக்க வில்லை,'' கூறினான்.

அப்போது நாகசாமி, ''நீ தான் பிறருக்கு உதவுபவனாயிற்றே! நான் வைத்தியம் செய்பவன் என்பதை நீ அறிவாயே! என் போன்றவர்கள் கேட்டால் கொடுப்பதற்கு இன் னொரு தராசு வாங்கி வைத்திருக்கக் கூடாதோ?'' என்று கேட்டான்.

அதுகேட்டு பாலுசாமியும், ''நான் இன்னொரு தராசும் வாங்கித் தான் வைத்திருந்தேன். உங்கள் மகள் வரு வதற்குச் சற்றுமுன் தான் நகை வியாபாரி நடேசன் ஒரு தங்கச் சங்கிலியை நிறுக்க வேண்டுமென்று கூறி வாங்கிக் கொண்டு போனார். நீங்கள் கேட்டபோது வைத்தியம் செய்வதற்கு அதை உடனே கொடுத்து உதவ முடியவில்லையே என வருந்து கிறேன்,'' என்றான்.

அப்போது தான் வைத்தியனான தான் ஒரு தராசை வாங்கி வைத்துக் கொள்ள வேண்டும் என்பது அவ னுக்குத் தோன்றியது. அப்போது நாகசாமி பாலுசாமியிடம், ''என்னை மன்னித்துவிடு! நீ தராசு கொடுக்க வில்லை என்பதற்காக ஆத்திரப்பட்டு விட்டேன். அதனால் கொஞ்சம் அதிக மாகவே கடுமையாகப் பேசிவிட் டேன். ஏதோ என் தராசை உன்னிடம் கொடுத்து வைத்திருந்தவன் போலப் பேசிவிட்டேன். தவறு எனதே!'' எனக் கூறி வருந்தினான். உண்மையி லேயே பாலுசாமி உபகாரி தான் என அவனை மிகவும் புகழ்ந்துவிட்டு நாகசாமி தன் வீட்டிற்குச் சென்றான்.



# தென்னாலி ராமன்



தென்னாலி ராமன் கிருஷ்ணதேவராயரின் தர்பாரில் சேர்ந்த ஆரம்ப காலத்தில் தர்பாரின் முக்கிய காவலதிகாரியும் மற்றொரு காவலாளியும் அவனை உள்ளே போக விடாமல் பலதடவை தடுத்து நிறுத்தி அவனைக் கேவலப் படுத்தினார்கள்.

ஒருமுறை ஒரு நாட்டிய நிகழ்ச்சியைத் தான் ரசித்துப் பார்க்க வேண்டுமெனக் கூறி கிருஷ்ணதேவராயர் தர்பாருக்குள் அநாவசியமாக யாரையும் நுழைய விடக்கூடாதென்று காவலதிகாரிக்குக் கட்டளை இட்டார். தென்னாலி ராமன் தர்பாருக்கு வந்தபோது காவலதிகாரியும் அவனது உதவிக் காவலாளியும் உள்ளே போகவிடாமல் அவனைத் தடுத்தார்கள்.





தென்னாலி ராமனும் "கடமையைச் செய்வதில் நீங்கள் எவ்வளவு உறுதியாக இருக்கிறீர்கள்!" என்று அவர்களைப் பாராட்டி, "இன்று மன்னர் எனக்குப் பரிசளிக்கப் போகிறார்!" என்றான். அப்போது அவர்கள் "உனக்கெல்லாம் பரிசு கிடைக்கிறது. எங்களைத் தான் கவனிப்பவர்கள் இல்லை!" என்று கூறினார்கள்.

தென்னாலி ராமனும் "கவலைப்படாதீர்கள்! நான் கவனிக்கிறேன். இன்று எனக்குக் கிடைப்பதை முழுவதுமாக உங்கள் இருவருக்கும் சமமாகப் பங்கிட்டுக் கொடுத்து விடுகிறேன். என்னை உள்ளே போகவிடுங்கள்!" என்றான். அவர்களும் சம்மதித்து அவனை உள்ளே போக அனுமதித்தார்கள்.





தென்னாலி ராமன் உள்ளே போய் மேடை மீது ஏறி தலைகீழாக நின்றான். நடனமாது நடனம் ஆடாது திகைத்து நின்றாள். ராயரோ கடுங்கோபம் கொண்டு, ''யாரந்த மடையன்? இழுத்துச் செல்லுங்கள்!'' என்று கத்தினார்.



தென்னாலி ராமன் எழுந்து நின்று, ''அரசே! என் நடனத்திற்கும் நீங்கள் நடனமாதுக்குப் பரிசளிப்பது போல பரிசைக் கொடுங்கள்!'' என்றான். ராயரோ பற்களைக் கடித்தவாறே, ''உனக்குப் பரிசா வேண்டும்? கொடுக்கிறேன். நூறு சவுக்கடிகள் தான் பரிசு!'' என்றார்.



தென்னாலி ராமனும், ''பரிசை ஏற்கிறேன், அரசே! ஆனால் இன்று எனக்குக் கிடைப்பதை தர்பாரின் காவலதிகாரிக்கும் அவனது உதவியாளனுக்கும் சமமாகப் பிரித்துக் கொடுப்பதாக வாக்களித்த பிறகே உள்ளே வந்தேன்!'' எனக் கூறி, அவர்களின் தொல்லைகளை விவரமாகக் கூறினான்.



கிருஷ்ணதேவராயரும் அவர்களை விசாரித்து, அவர்களுக்குப் போதிய ஊதியம் கொடுக்கப்படவில்லை என்றறிந்து அவர்களது ஊதியத்தை உயர்த்தினார். அவர்களும் தென்னாலி ராமனால் தான் தமக்கு ஊதிய உயர்வு கிடைத்தது என மகிழ்ந்து, அதுமுதல் ராமனை தடையின்றி உட்செல்ல அனுமதித்தனர்.

# கோடை காலத்து குளிர்ச்சி தரும் செய்திகள்

கடும் வெயிலால் அக்குளத்தின் நீர் மிகவும் சூடாகிவிட்டது. அதனால் அதில் வசித்த ஒரு தவளை தரையில் குதித்து நிழலான ஓரிடத்தில் போய் நின்றது. அந்த நிழலோ ஒரு நாகப் பாம்பு படமெடுத்ததால் ஏற்பட்டது!

இதுபோல உச்சிவேளை வெயிலைத் தாளாமல் ஒரு பாம்பு துடி துடித்து ஒரு மயிலினருகே சுருண்டு படுத்தது. இந்த இரு காட்சிகளும் மகாகவி காளிதாசரால் கோடை காலம் பற்றித் தம் படைப்புகளில் வர்ணிக்கப்பட்டவையாகும். கோடை காலம் என்றாலே தகிக்கும் வெயில், வியர்வை, வெப்பமான காற்று முதலியனவே நம் நினைவிற்கு வரும். வெயிலின் கடுமையைத் தணிக்க திராட்சை, சாத்துக்குடி, மாம்பழம் ஆகியவற்றின் பழரசங்களைப் பருகுகிறோம். குளிர்ச்சி தரும் நிழல்களை நாடுகிறோம்.



தற்போது கோடையின் வெப்பத்திலிருந்து தப்ப பல குளிர்சாதனங்கள் வந்துள்ளன. மின் விசிறிகள் பயன் படுகின்றன. ஐஸ்கிரீம், குளிர் பானங்கள் போன்றவற்றைப் பயன்படுத்துகிறார்கள். இவை யாவும் இல்லாத முற்காலத்தில் வீடுகளைக் கட்டும் போதே தட்பவெப்பம் பற்றிக் கவனம் செலுத்தினார்கள். கிராமங்களில் ஓலைக் குடிசைகளையும் ஓட்டு வீடுகளையும் காணலாம். இவை கூரையில் காற்று புகும்படி அமைக்கப்படுவதால் வீட்டினுள் வெப்பத்தை உணர முடியாது. அரண்மனைகள் கட்டப்பட்டதும் இதே போலத்தான்.

மத்தியப் பிரதேச ஓர்ச்சாவை மதுகர்ஷா என்ற மன்னர் 17வது நூற்றாண்டில் ஆண்டு வந்தார். அவரது காலத்திய ராய்பர்வீன் என்ற பெண் கவிஞரின் வீட்டைப் பற்றி அறியவே வேண்டும். அது பல மலர்ச்செடிகள், பழ மரங்கள், நீர் ஊற்றுகள் ஆகியவற்றின் மத்தியில் கட்டப்பட்ட இரண்டடுக்கு மாளிகை அதிக

உயரமில்லாத அதன் முதலடுக்கு தரை மட்டத்திற்குக் கீழ் கட்டப் பட்டது. வெயில் முழுவதையும் இரண்டாவது அடுக்கு தாங்கிக் கொள்வதால் தரைமட்டத்திற்குக் கீழ் உள்ள பகுதி 'சில்'லென்று இருந் தது. 'பூல்பாக்' என்ற இவ்வீட்டின் கீழ் பகுதியை குளிர்ச்சியாக வைக்க அதன் மேற்பரப்பில் செயற்கை நீர் ஊற்றுகள் அமைக்கப்பட்டன.

ராஜஸ்தானில் மேவாரின் ராணா ஜகத்சிங் சலவைக் கல்லால் ஏரி மாளி கையைக் கட்டினார். அது உலகப் புகழ்பெற்றது. ஏரியின் நடுவில் இது இருப்பதால் இதனுள் வெப்பம் அதிக மிருக்காது. கோடைகால வெப்பத் தைத் தவிர்க்க நம் நாட்டில் சிம்லா, டேராடூன், மசூரி, ஊட்டி, டார்ஜி லிங், மகாபலேஷ்வர், நைனிடால் போன்ற கோடைவாசத் தலங்கள் உள் ளன. இவற்றில் பலவற்றை பிரிட்டி ஷாரே திருத்தி அமைத்தனர். அவர் களால் நம் நாட்டு வெப்பத்தைத் தாங்க முடியாததால் கோடையில் இந்த ஊர்களுக்குச் சென்றார்கள்.

நம் நாட்டில் பனிக்கட்டி தயாரிப்பு என்பது 1850லிருந்து தான் ஆரம்ப மாயிற்று. அதற்கு முன் நம் நாட்டில் பனிக்கட்டியை பிரிட்டிஷார் இறக்கு மதி செய்து ஓரிடத்தில் பாதுகாப்பாக வைத்தார்கள். அது தான் சென்னை மெரினாக் கடற்கரையில் உள்ள 'ஐஸ் ஹவுஸ்'. நம் நாட்டில் குஜராத், ராஜஸ்தான் மாநிலங்களில் கோடை யில் வெப்பம் 48லிருந்து 52 டிகிரி செல்சியஸாக இருப்பதால் அங்குள்



ளோர் பெரிய தலைப் பாகைகளை அணிகிறார்கள்.

குஜராத்தில் ராஜா-ராணிகள் செல் லும் பாதை ஓரங்களில் நூறடி ஆழம் கொண்ட பெரிய இறங்கு கிணறுகள் ஆங்காங்கே வெட்டப்பட்டு அவர் கள் இளைப்பாற வசதிகள் செய்யப் பட்டன. ஜோத்பூர், பிரஹ்ஹாப்பூர் போன்ற இடங்களில் வீடுகளுக்கு நீலம் அல்லது வெள்ளை நிறத்தை அடித்து வெப்பத்தையும், வெளிச்சத் தையும் குறைத்துக் கொள்கிறார்கள்.

மின்விசிறிகள் நம் நாட்டிற்கு வரு வதற்கு முன் ஓலை விசிறிகளையும், கட்டை மற்றும் துணியைக் கொண்டு தயாரிக்கப்பட்ட 'இழு பங்ஃகா'க் களையும் பயன்படுத்தினார்கள். இவற்றில் பல சந்தன மரத்தாலும், தந்த வேலைப்பாடுகளுடனும் செய் யப்பட்டன. சந்தனத்தைப் பூசிக் கொண்டும், சந்தனம் கலந்து நீரை

உடல் மீது தெளித்துக் கொண்டும் கோடை வெப்பத்தைத் தணித்துக் கொண்டார்கள். இழு பங்காக்களை ஆங்கில அதிகாரிகள் அலுவலகங்களி லும் தம் வீடுகளிலும் பயன்படுத்தி வந்தார்கள்.

நம் முன்னோர்கள் வீடுகளைக் குளிர்ச்சியாக வைத்துக் கொள்ள வீட் டைச் சுற்றி காலையிலும் மாலை யிலும் நீர் தெளிப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார்கள். ஜன்னல்களி லும் நிலைவாசல்களிலும் வெட்டி வேர் படல்களைக் கட்டி அவற்றின் மீது நீர் தெளித்து நறுமணம் கமழச் செய்து வீட்டு வெப்பத்தைத் தணித் தார்கள். நீர், தயிர், மோர் போன்ற வற்றை மண் கலயங்களில் வைத்து குளிர்ச்சியாக இருக்கச் செய் தார்கள். சிலர் தலைக்கு விளக் கெண்ணெய் தடவிக் கொண் டும், எண்ணெய் தேய்த்துக் குளித்தும், உடலில் சந்தனம் பூசிக் கொண்டும் வெப்பத் தைத் தணித்துக் கொண்டனர்.

தேனையும் ரோஜா இதழ் களையும் கொண்டு 'குல்கந்து' தயாரித்து சாப்பிட்டும், இள நீர், எலுமிச்சம்பழச் சாறு, வெள்ளரிக்காய் ஆகியவற்றை உட்கொண்டும் வெப்பத்தைத் தணித்துக் கொண்டனர்.

கோடைகாலத்தில் வெல் லம், சுக்கு, எலுமிச்சை ஆகிய வற்றை நீரில் கரைத்து பானக மாக்கிக் குடித்து வெப்பத்தை தணித்துக் கொள்கிறார்கள்.

வட இந்தியாவில் லஸ்ஸியும், தென்னிந்தியாவில் நீர்மோரும் கோடையின்போது பருகப்படும் பானங்களாம். பலவகை மாம்பழங் களைக் கோடையில் நறுக்கிச் சாப் பிடுகிறார்கள். அல்ஃபான்ஸ், பங்கன பள்ளி, மல்கோவா, பெங்களூரா, நீலம், ருமானி எனப் பலவகை மாம்பழங்கள் கோடையின்போது ஏராளமாகக் கிடைக்கின்றன.

பள்ளிகள் கோடைகால ஆரம்பத் தில் மூடப்பட்டு கோடை முடிவில் திறக்கப்படுகின்றன. இந்த விடு முறை ஏப்ரல் மத்தியில் ஆரம்பமாகி ஜூன் முதல் வாரத்தில் முடியும். இதனால் சிறுவர் சிறுமியர் வெயி லில் அலைக்கழிக்கப்படுவதில்லை.



# கடவுள் மன்னரானார்!



மன்னனைக் கடவுளாக மதித்ததைப் படித்திருக்கிறோம். ஆனால் கடவுளை மன்னனாக மதித்து வழிபடுவது தெரியுமா?

மத்திய பிரதேஷின் ஓர்ச்சாவிலுள்ள ராமராஜர் ஆலயத்தில் தான் அவ்வாறு நடக்கிறது. இந்த ராமர் கோயிலை புந்தேல் வம்ச மன்னன் மதுகர்ஷா கி.பி.1500 வாக்கில் கட்டினாராம். அவர் கிருஷ்ண பக்தர். அவரது மனைவி ராணி கணேஷ் ராம பக்தை.

மதுகர்ஷா ஒருமுறை தம் மனைவியோடு பிருந்தாவனத்திற்குப் போய் கிருஷ்ண பகவானை தரிசிக்க விரும்பினாராம். ராணியோ அவரோடு செல்ல மறுத்து அயோத்திக்குப் போய் ராம பகவானைத் தரிசிக்க விரும்பினாளாம்.

மதுகர்ஷா கோபம் கொண்டு, ''நீ உன் ராமரை இங்கே அழைத்து வா, பார்க்கலாம்!'' என்று இரைந்தார். ராணியும் அவ்வாறே செய்வதாகக் கூறி அயோத்திக்குச் சென்று ஒரு வருட காலம் தியானத்தில் அமர்ந்தாள்.

ஒருநாள் ராமர் அவள் முன் தோன்றி அவளுடன் செல்ல இசைந்தாராம். ஆனால் அங்குதான் பகவான் ராமராக வழிபடப்படாமல் மன்னர் ராமராக வழிபடப்பட வேண்டும் என்ற நிபந்தனையை விதித்தாராம். மதுகர்ஷா ராணி அழைத்து வந்த ராமருக்கு ஆலயம் கட்டி மன்னர் ராமராக வழிபட்டாராம்.

ஓர்ச்சாவிலுள்ள ஆலயம் ஒன்றில் தான் இவ்வாறு ராமரை மன்னராகக் கருதி வழிபாடு நடக்கிறது.

## பிஹார் மாநிலப் பழங்கதை

பிஹார் மாநிலம் நம் நாட்டின் வடக்குத் திசையில் உள்ளது. இந்தப் பெயர் விஹார் என்ற சொல்லில் இருந்து வந்தது. இம்மாநிலத்தில் பௌத்த விஹாரங்கள் எனப்படும் மடங்கள் நிறைய உள்ளன. இம் மாநில மக்களும் அடுத்துள்ள மேற்கு வங்க மக்களும் சொற்களில் வரும் 'வ'வை 'ப' என உச்சரிப்பதால் 'விஹார்' என்பது 'பிஹார்' என ஆகியது.

புத்தர் பிரான் இம்மாநிலத்து புத்தகயாவில் தான் ஞானஒளி பெற்றார். இதுவே அவர் முக்தி அடைந்த இடமாகும். மேலும் புத்த மதத்தைப் பரப்பிய அசோக சக்ரவர்த்தியின் தலைநகர் பாடலிபுத்திரமும் இம்மாநிலத்தில் உள்ளது. அதுதான் இன்றைய பாட்னா. இன்றும் இதுவே பிஹார் மாநிலத்தின் தலைநகர்.

பிஹார் 94,163,000 ச.கி.மீ. பரப்பளவு கொண்டது இந்திய மாநிலங்களில் பரப்பளவில் ஒன்பதாவது இடம் பெற்றுள்ளது. இதன் மக்கள் தொகை 82,878,796. மக்கள் தொகை அடிப்படையில் இரண்டாவது இடத்தை வகிக்கும் மாநிலம் இது. வடக்கே நேபாளம், கிழக்கே மேற்கு வங்கம், தெற்கே ஜார்கண்ட், மேற்கே உத்திர பிரதேஷ் இதைச் சுற்றியுள்ளன. இம் மாநிலத்தின் ஆட்சிமொழி ஹிந்தி. ஹிந்தியின் பல வட்டார மொழிகள் இங்கு பேசப்படுகின்றன. அவற்றில் முக்கியமானவை போஜ்புரியும் மைதிலியும் ஆகும்.

# பலவானும் முட்டாள் பூதமும்

சீதாப்பூர் என்ற ஊரில் பலவான் என்ற குத்துச் சண்டை வீரன் இருந்தான். அவன் சுற்று வட்டாரத்து குத்துச் சண்டை வீரர்களை எல்லாம் தோற்கடித்துப் பெயர் பெற்றவன். அதனால் தன்னை மிஞ்சியவர் யாருமே இல்லை என்று அவன் பெருமை அடித்து வந்தான்.



ஒருநாள் மாலை அவ்வூர் பிரமுகர்கள் பொது இடத்தில் கூடி ஊர் வம்பு பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது பேய் பிசாசுக ளைப் பற்றிய பேச்சு வந்தது. அங்கிருந்த பலவான், ''என்னை எந்தப் பேயும், பிசாசும் அசைக்க முடியாது!'' என்று பெருமை பீற்றிக் கொண்டான். அப்போது கூடியிருந்தவர்களில் ஒருவன், ''போதும், நிறுத்து! நீ இப் படிப் பெருமை அடிப்பதைக் கேட்டுக் கேட்டு சலித்துப் போய்விட்டோம். பூதத்தைக் கண்டால் பயப்பட மாட் டாயா? பானிகஞ்ச் பள்ளத் தாக்கு பூதத்தை எதிர்கொள்ள உன்னால் முடியுமா?'' என்று சவால் விடுத்தான்.



பலவானும், ''எந்த பூதமும் என்னை எதுவும் செய்துவிட முடி யாது. பானிகஞ்ச் பள்ளத்தாக்கில் பூதம் இருப்பதாக நான் கேள்விப் படவே இல்லையே!'' என்றான்.

அதுகேட்டு சவால் விடுத்தவன், ''அது பயங்கர பள்ளத்தாக்கு. அதற் குப் போக வழி குண்டும் குழியுமாய், கரடுமுரடாக இருக்கும். அது மட்டு மல்ல. வழி நடுவே கூரான பாறைகள் வேறு இருக்கும். உன்னால் அங்கே போகவே முடியாது,'' என்றான்.

பலவானோ, ''ஏன் முடியாது? நான் போய்விட்டு வருகிறேன், பார்!'' என்று மீசையை முறுக்கினான். ஆனால் மற்றவனோ, ''இந்த முறுக்கை எல்லாம் அந்தப் பானி கஞ்ச் பூதத்திடம் காட்டிவிட்டுத் திரும்பி வா, பார்க்கலாம்!'' என்று கேலியாகக் கூறினான். இன்னொரு வன் ''அந்த பூதத்தால் எந்த உருவை வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ள முடியும். அது தெரியுமா?'' என்று கேட்டான்.

பலவானோ சற்றும் சளைக்காமல், ''பூ! அது எந்த உருவில் வந்தாலும் பயப்படவே மாட்டேன். ஊதித் தள்ளிவிடுவேன். அதை ஏமாற்றி முட்டாளாக்கிவிட்டு வந்து உங் களிடம் அதுபற்றி விவரமாய்க் கூறுகிறேன்,'' என்றான்.

மறுநாள் அவன் பானிகஞ்ச் பள்ளத்தாக்கிற்குப் பயணமான

போது அவன் வீட்டிற்கு அடுத்த வீட்டிலிருந்த கிழவி அவனது நெற்றியில் திலகமிட்டு, ''மகனே! வெற்றியுடன் வா! உனக்கு ஒரு முட்டையையும் ஒரு சிறு பொட்டலத்தில் உப்பையும் கொடுக்கிறேன். அது சமயத்தில் உனக்கு உதவும்!'' என்றாள்.

பலவான் பள்ளத்தாக்கினுள் சென்றபோது ஒரு குரல், ''ஓ! வந்திருப்பது பலவானா! உன் சோம்பேறி நண்பன் கல்லன் இங்கே இருக்கிறான். வா, இங்கே! நாம் பேசிப் பொழுது போக்கலாம்!'' என்றது. பலவானுக்கு பூதம் தான் அப்படிக் கூறி அழைக்கிறது என்று தெரிந்து விட்டது. உடனே அவன் ''கல்லா! நீ எங்கே இருக்கிறாய்?'' என்று கேட்டான்.

அடுத்த விநாடியே பூதம் கல்லன் உருவில் வந்து அவன்முன் நின்றது. பலவான் சிரித்துக் கொண்டே, ''ஓ! பானிகஞ்ச் பூதமா? நீ கல்லன் போல வந்திருப்பது எனக்குத் தெரியாதா?'' என்றான்.

அதைக் கேட்ட பூதம் திடுக்கிட்டது. அதுவரை யாரும் அதனிடம் அவ்வாறு பேசியது இல்லை. அதனால், ''நீ ஏன் இங்கு வந்தாய்?'' என்று கேட்டது. பலவானும், ''அட, வடிகட்டின முட்டாளே! இது கூடவா உனக்குத் தெரியவில்லை! நான் முதலைகளையும் சிங்கங்களையும் பிடித்துக் கூண்டுகளில் அடைத்தவன். இப்போது பூதங்களைப் பிடித்து அடைத்துக் கொண்டிருக்கிறேன்,'' என்றான்.

பூதம் அவனை ஏறஇறங்கப்

# நாலந்தா பல்கலைக்கழகம்

குப்த மன்னர்கள் கி.மு.ஐந்தாவது நூற்றாண்டில் நாலந்தா பல்கலைக் கழகத்தை நிறுவினார்கள். அது கல்வி பயில ஒரு முக்கிய மையமாகியது. இங்கு புத்த மதம், வேதங்கள், தர்க்க சாஸ்திரம், இலக்கணம், மருத்துவம் எனப் பல துறைகளில் கல்வி அளிக்கப்பட்டது. இங்கு ஆயிரக் கணக்கான மாணவர்கள் படித்தனர்.

அயல்நாடுகளிலிருந்தும் பலர் வந்து இங்கு கல்வி பயின்றார்கள். அவர்களில் குறிப்பிடத்தக்கவர் பௌத்த யாத்திரீகரான யுவான் சுவாங். இப்பல்கலைக் கழகத்தை ஹர்ஷவர்த்தன மன்னனும் பால வம்சத்து மன்னர்களும் பேணி வளர்த்துப் பெரிதாக்கினார்கள்.



பார்த்துவிட்டு, ''உனக்கு அவ்வளவு பலம் இருப்பதாகத் தெரியவில் லையே!'' என்றது.

அதற்கு பலவான், ''ஒருவனைப் பார்த்த உடனேயே அவனைப் பற்றி அபிப்பிராயம் கூற முடியாது. நீ கூட முழுச் சோம்பேறி கல்லன் போல வந்திருக்கிறாய். ஆனால் நீ கல்லன் அல்லவே. இதோ பார்! கீழே கிடக்கும் இந்தக் கல்லை எடுத்து உன்னிடம் கொடுக்கிறேன். அதைப் பிழிந்து தண்ணீர் விழச் செய்!'' என்று கூறி ஒரு கல்லை எடுத்து பூதத்திடம் கொடுத்தான்.



பூதம் அதை பலமாக நசுக்கியது. ஆனால் அதிலிருந்து ஒரு சொட்டுத் தண்ணீர் கூட விழவில்லை. அப் போது அது ''யாராலும் கல்லைப் பிழிந்து நீர் வரவழைக்க முடியாது,'' என்றது.

பலவானோ, ''நான் வரவழைக் கிறேன், பார்!'' என்று கூறி அந்தக் கல்லை அதனிடமிருந்து வாங்கி னான். அது பார்க்காதபோது அதைத் தன் சட்டைப் பைக்குள் போட்டுக் கொண்டு, பையில் தான் வைத்திருந்த முட்டையை எடுத்து இரண்டு கைகளாலும் நசுக்கினான். முட்டை நொறுங்கி அதிலிருந்த திரவம் பல வானின் விரல்கள் வழியாக நீர் போலச் சொட்டியது. பூதம் அதைக் கண்டு மலைத்துப் போயிற்று.

அடுத்து பலவான் ஒரு கூழாங் கல்லை எடுத்து பூதத்திடம் கொடுத்து, ''இதை மாவு போலப் பொடி யாக்கு!'' என்றான். அது எவ்வளவு தான் முயன்று பார்த்தும் அந்தக் கல்லைப் பொடியாக்க முடிய வில்லை. அப்போது பலவான் ''நான் பொடிப்பொடியாக்குகிறேன்,'' என்று கூறி இடது கையில் உப்புப் பொட்டலத்தை எடுத்து மறைத்து வைத்துக் கொண்டான்.

வலது கையால் கூழாங்கல்லை பூதத்திடமிருந்து வாங்கி அது பார்க்காதவிதமாய்த் தன் சட்டைப் பைக்குள் அந்தக் கல்லைப் போட்டுக் கொண்டான். பிறகு இரு கைகளா லும் உப்புப் பொட்டலத்தை நசுக் கவே அது அவனது கைகளில் ஒட்டியும் கீழேயும் உதிர்ந்து விழுந்தது. பூதம் அதைக் கண்டு ஆச்சரியப்பட்டது.

அப்போது பலவான், ''என் பலம் எவ்வளவு என்று தெரிந்ததா? என் னோடு என் ஊருக்கு வா!'' என்றான்.

# கைவினைப் பொருள்கள்



பிஹாரின் கைவினைப் பொருள்கள் புகழ் பெற்றவை. கற்களிலும் மரங்களிலும் கடைசல்கள், தோலால் ஆனவை, உலோகப் பொருள்கள், துணிகள், மெழுகு, கண்ணாடியால் ஆன பொருட்கள் மிக நேர்த்தியானவை.

மதுபனி ஓவியக் கலை இங்கு சிறப்பானது. சுவர்களிலும் முற்றங்களிலும் பெண்கள் வரையும் சித்திரங்கள் இக் கலையின் அடிப்படையில் தான். இதற்கான வண்ணங்கள் இலைகளாலும், கல்லில் இருந்தும் தயாரிக்கப்படுகின்றன.

பூதமோ, "வருகிறேன். ஆனால் இன்று என்னுடன் என் குகைக்கு வந்து விருந்து சாப்பிட்டு, நன்கு தூங்கிவிட்டு நாளைக்குக் காலையில் நாம் உன் ஊருக்குப் புறப்படலாம்," என்றது.

பலவானும் பூதம் ஏதோ திட்டம் போட்டுக் கொண்டு தான் அவ்வாறு கூறுகிறது என்பதைப் புரிந்து கொண்டுவிட்டான். அவர் சிரித்துக் கொண்டே "ஆகா! உன் குகையல்ல. வேறு எங்கு வேண்டுமானாலும் என்னைக் கூட்டிக் கொண்டுபோ! என்னை யாராலும் ஒன்றும் செய்ய முடியாது," என்றான்.

பூதமும் அவனை அழைத்துக் கொண்டு தன் குகைக்குச் சென்றது. குகைக்குள் எலும்புகளும் மண்டை யோடுகளுமாகச் சிதறிக் கிடந்தன. ஒரு மூலையில் பொன்னும் மணிகளும் நகைகளுமாகக் குவிக்கப் பட்டிருந்தது. அவை பூதம் மனிதர்களைக் கொன்று அவர்களது உடல்களின் மாமிசத்தைத் தின்றபின் சேர்த்து வைக்கப்பட்டவை என்று புரிந்து கொண்டான்.

சாப்பிட்ட பின் பூதம் இரண்டு தலையணைகளையும் போர்வையையும் பலவானுக்குக் கொடுத்து "இனி நன்றாகத் தூங்கு. நான் என் அறையில் படுத்துக் கொள்ளப் போகிறேன்," என்று சொல்லி விட்டுப் போயிற்று.

அன்றிரவு பலவான் தூங்கவில்லை. சற்று நேரமானதும் இரு தலையணைகளையும் நீளவாக்கில் வைத்துப் போர்வையால் போர்த்தினான். வேறொரு இடத்தில் ஒளிந்து

கொண்டு கண்காணிக்கலானான்.

நள்ளிரவானதும் பூதம் ஒரு குண்டாந்தடியை எடுத்துக் கொண்டு வந்தது. படுக்கையில் பலவான் தான் படுத்திருக்கிறான் என்று எண்ணி அது தடியால் போர்வை மீது ஏழெட்டு அடிகளை அடித்துவிட்டு, ''ஒழிந் தான் பயல்!'' என்று கூறிக் கொண்டே தன் இடத்திற்குப் போய்விட்டது. பூதம் போன சற்று நேரத்திற்குப் பின் பலவான் வந்து தன் படுக்கையில் படுத்துத் தூங்கினான்.

காலையில் பூதம் அங்கு வந்த போது பலவான் படுக்கையில் உட்கார்ந்திருந்ததைக் கண்டு ஆச் சரியப்பட்டது. அவனோ அதனிடம் ''இங்கே மூட்டைப் பூச்சித் தொல்லை அதிகமாக இருக்கிறது. நேற்றிரவு ஏழெட்டு தடவை அவை என்னைக் கடித்துவிட்டன!'' என்று கூறினான்.

மரண அடி கொடுத்தும் அது மூட்டைப் பூச்சிக் கடி என பலவான் கூறியது கேட்டு பூதம் பயந்து அலறியவாறே அங்கிருந்து ஓடியே போய்விட்டது.

பலவான் அங்கிருந்த பொன் னையும் மணிகளையும் ஆபரணங் களையும் மூட்டையாகக் கட்டி எடுத்துக் கொண்டு தன் ஊருக்குப் போய், ''இவை தான் நான் பானிகஞ்ச் பூதத்தை அடித்துத் துரத்தி எடுத்து வந்தவை. அது ஒரு முட்டாள் பூதம்,'' என்று பெருமை அடித்துக் கொண்டான்.



# சுற்றுலாத் தலங்கள்

புத்தர் ஞானஒளி பெற்ற புத்த கயாவில் அவர் அமர்ந்த போதி மரத்தைக் காணலாம். அங்குள்ள ஆலயமும் அருங்காட்சியகமும் காணத்தக்கவை.

மற்றொரு இடம் ராஜ்கிர். மலைகளாலும் காடுகளாலும் சூழப்பட்ட இந்த இடத்தில் ஞானஒளி பெற்றபின் புத்தர் ஐந்து ஆண்டுகள் இருந்தாராம். ஜைன மத 24 தீர்த்தங்கர்களும் இங்கு வந்து தம் வழிபாடுகளைச் செய்தனர் என்றும் கருதப்படுகிறது.

# செய்திச்சுடர்

## கண்ணாடி காத்தது!

லக்னௌவின் வனவிலங்கு காப் பகத்தில் சன்னி, சீனா என்ற சிம்பான்சி வகைக் குரங்குகள் ஏனோ வாட்டமுற்று தம் கூண்டுகளில் சிணுங்கி மூலையில் கிடந்தன. இதனால் அவற்றைக் கண்டு களிக்க வந்த பொதுமக்கள் ஏமாற்றம் அடைந்தனர். இதனால் என்ன செய்வ தென காப்பக அதிகாரிகள் திகைத்தனர்.

ஓர் அதிகாரிக்கு ஒரு யோசனை தோன்றியது. அதன்படி இரண்டு கூண்டுகளிலும் இரு பெரிய நிலைக் கண்ணாடிகள் பொருத்தப்பட்டன. இரு சிம்பான்சிகளும் கண்ணாடிகளில் தம் உருவங்களைப் பார்த்துவிட்டு தம் முடன் இருக்க ஒரு நண்பன் வந்து விட்டான் என எண்ணி மகிழ்ந்தன.



தாம் செய்வனவற்றையெல்லாம் நிலைக் கண்ணாடி உருவங்களும் செய்வது கண்டு பூரித்துப் போயின. அவை குதித்துக் கத்துவது கண்டு அவற்றைப் பார்க்க வந்தவர்களும் மகிழ்ச்சி அடைந்தனர்.

## வளர்ப்புப் பிராணி மலைப்பாம்பு!



பிரிட்டிஷ் கொலம்பியாவில் கெலௌனா என்ற ஊரில் வாழும் கூப்ஸ் குடும்பத்தினர் பாசத்துடன் வளர்த்து வரும் பிராணி ஒரு மலைப் பாம்பு. 5 மீட்டர் (16.5 அடி) நீளமானது. அதன் பெயர் போஸ்.

குடும்பப் பெரியவர் களும், ஒன்பது குழந்தைகளும் அதனுடன் ஐந்தாண்டு களாக வாழ்ந்து வருகிறார்கள். அந்நகர அதிகாரிகள் அந்த மலைப் பாம்பினால் எல்லோருக்குமே ஆபத்து என, அக்குடும் பத் தலைவரோ, ''அது ஒன்றும் செய் யாது. எங்கள் இரண்டு வய துக் குழந்தை கூட அதனுடன் விளையாடுகிறது. இப்பேட்டையின் மற்ற குழந்தைகளும் பயமில்லாமல் அதனுடன் விளையாடு கின்றனர்,'' எனச் சமாதானம் கூறினார்!



# விநாயகர்

பார்வதி தேவி மறுகணமே தனது துயரத்தை மறந்து பிள்ளையாரை தூக்கி வாரி அணைத்துக் கொள்ள, சிவனார் கரம் நீட்டி அன்புடன் அழைத்தார்.

பிள்ளையாரும் சற்றுத் தயங்கிய வாறே சிவனாரின் கரங்களுக்குத் தாவினார். சிவனாரும், ''பிள்ளை யாரே! உன்னை எம் புதல்வனாக அடைந்தது நான் செய்த பாக்கியமே!'' எனக் கூறித் தழுவி உச்சி முகர்ந்தார்.

பிள்ளையாரும் சட்டெனக் கீழே குதித்து சிவனாரின் பாதங்களில் விழுந்து வணங்கி, ''தந்தையே! நான் தான் தங்களது புதல்வனாகப் பிறந்து மாபெரும் பாக்கியம் அடைந்திருக் கிறேன்'' எனக் கூறி பார்வதி தேவி யையும் நமஸ்கரித்தார். பின்னர் அவர் மகாவிஷ்ணுவையும் வணங்கினார்.

விஷ்ணுவும் தன்னருகே பிள்ளை யாரை அழைத்து ஆசிகள் கூறினார். அப்போது பிள்ளையார் விஷ்ணுவின் ஒளியில் நீல நிறத்தில் காட்சி அளித் தார். அவருக்கும் விஷ்ணுவுக்கும் பல ஒற்றுமைகள் இருப்பதை யாவரும் கண்டனர்.

விநாயகர் பிரம்மாவையும் வணங் கவே பிரம்மாவும் ''நீ முதற்பூஜையை ஏற்றுக் கொள். மகாகணபதி !'' எனக் கூறி பிள்ளையாரின் கன்னத்தில் செல்லமாக ஒரு தட்டு தட்டினார். அதன் பின் பிள்ளையார் லட்சுமி தேவியையும் சரஸ்வதி தேவியையும் வணங்கினார். அவர்களும் ''நாங் களும் உன் பக்கத்திலேயே மாமியார், மருமகள் என்பதனையும் மறந்து



இருப்போம். நாம் மூவரும் முதலில் ஒன்றாக ஒரே தாய் வயிற்றில் பிறந் தாலும் பின்னர் பால் கடலிலிருந்தும், பிரம்மனின் நாவிலிருந்தும் நாங்கள் தனித்தனியே வந்தோம். பார்வதி தேவி முதலில் தட்சனின் புதல்வி சதிதேவியாகவும் பின்னர் இமய வனின் புதல்வியாகவும் பிறந்தாள். ஜெயலட்சுமி என்ற சித்தியையும் வித்தியாவதி என்ற புத்தியையும் விநாயகருக்கு ஏற்ற மனைவிகள் எனக் கருதுகிறோம். அவர்களைப் பிள்ளையாருக்கு தாமதிக்காமல் மணம் முடித்து வைப்போம்,'' என்றார்கள்.

லட்சுமியும் ''ஜெயலட்சுமியுடன் விளங்கும் விநாயகரை நம்பின வருக்கு எந்த வேலையும் வெற்றிகர மாகவே முடியும்.. ஏனெனில் ஜெய லட்சுமி எனது அம்சம். பிள்ளையார் மணந்து கொள்ளப் போகும் பெண்'' என்றாள்.

சரஸ்வதியும் ''பிள்ளையார் அறிவை அளிப்பவர். கல்வி புகட்ட ஆரம்பிக்கு முன் யாவரும் இவ ரையே வணங்குவார்கள். என் அம்ச மான வித்தியாவதி என்ற புத்தி என் பவள் இவரை மணந்து கொண்டு வாழட்டும்,'' என்றாள்.

பிள்ளையாரோ சற்று திகைத்து யாவரையும் பார்த்து, ''எனக்கு இப் போது திருமணம் வேண்டாம். அதற் காகப் பல தடங்கல்களை நானே ஏற்படுத்திக் கொள்ளப் போகிறேன்,'' என்றார்.

அப்போது பிரம்மாவும் மற்றவர் களும் ''ஆயிரம் தடங்கல்களே வந் தாலும் இந்தக் கல்யாணம் நடந்தே தீரும்,'' என்றார்கள். அப்போது நாரதர் முன் வந்து ,''விநாயகரே! இந்த மாதிரி திருமணத்திலிருந்து தப்பிவிட முடியாது. நானும் குடும் பத்திலிருந்து தப்பத் தானே மூவுல கிலும் சுற்றித் திரிகிறேன். திருமணம் செய்து கொள்வதும் வேலை பார்ப் பதும் ஆண்களுக்கு அழகு. திரிமூர்த்தி களும் திருமணம் செய்து கொண்டு ஆக்கல், காத்தல், அழித்தல் என்று மூன்று தொழில்களையும் செய்து வருகிறார்கள். நீயும் நானும் இதற்கு விதிவிலக்கா?'' என்றார்.

பிள்ளையார் சிரித்தவாறே ''நார தரே! உமக்கும் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டுவிட்டதா? ஏதாவது சுயம்

வரத்திற்குப் போகப் போகிறீரா?'' என்று கேட்டார்.

நாரதரும் ''விநாயகனே! நீ எல்லாம் தெரிந்தவன். என்னை விட வாக்குச் சாதுரியம் படைத்தவன். எனவே உன்னை நினைக்காமல் எதுவும் ஆரம்பிக்க முடியாது. நீ முக்காலமும் உணர்ந்தவன். மாபெரும் ஞானி. அதனால் உணர்ச்சி வசப்படாமல் இருக்க முடியும். மாயை உன்னை ஒன்றும் செய்ய முடியாது. உன் கண்களை மறைக்காது. உன்னால் எல்லோருக்கும் நன்மையே ஏற்படும். எனவே சித்தி, புத்திகளை மணந்து எட்டு சித்திகளையும், எட்டு செல்வங்களையும் உன்னிடம் வைத்துக் கொள்,'' என்று கூறி தம் வீணையை மீட்டி மங்கள கீதம் வாசித்து முடித்தார்.

தேவர்கள் தம் இருப்பிடங்களுக்குத் திரும்ப சிவனாரும் பார்வதியும் பிள்ளையாருடன் தம் வாசஸ்தலமாகிய கைலாசத்திற்குச் சென்றார்கள். நாரதர் வச்சிரதந்தனைக் காணப் போய்விட்டார்.

அன்று கணபதி வாலைப் பிடித்து 'கிர்' 'கிர்'ரென்று சுற்றி எறிந்ததால் வச்சிரதத்தன் உடல்வலியால் அவதிப் பட்டுக் கொண்டிருந்தான். அவனது மனைவி தவளா அவனது உடம்பிற்கு ஒத்தடம் கொடுத்து வந்தாள். நாரதர் வருவதைக் கண்டதும் அவள், ''இவர் இன்னமும் என்ன கலகம் விளைவிக்கப் போகிறாரோ?'' என எண்ணியவாறே அந்தப்புரத்திற்குள் சென்றாள்.

நாரதர் அந்த மூஷிகாசுரனான



வச்சிரதந்தனிடம் ''உன்னை தோற்கடித்த கணபதி பிள்ளையாராகப் புகழ்பெற்று விளங்குகிறார். தெரியுமா?'' என்று பேச்சை ஆரம்பித்தார். அவனும் ''பிள்ளையாரா? யாருடைய பிள்ளயாக ஆனார்?'' என்று கேட்டான்.

நாரதரும் ''எல்லாம் அந்த சிவனாருடைய பிள்ளையாகத்தான் ஆனார். இதோ பார். வரங்களை அளிக்க பிரம்மதேவன் இருக்கும் வரை கவலையே இல்லை. நீ யானை முகம் கொண்ட பிள்ளையாரை எப்படிப் பழி வாங்க வேண்டுமோ வாங்கு!'' எனக் கூறிவிட்டுப் போனார். அதன்படியே வச்சிரதந்தன் பிரம்மனைக் குறித்துக் கடும் தவம் செய்யக் கிளம்பினான். அவனது மனைவி தடுத்தும் நிற்கவில்லை.



அவனது தவத்தால் மகிழ்ந்த பிரம்மாவும் அவன் முன் தோன்றி, ''வச்சிரதந்தா! என்ன வேண்டும் உனக்கு?'' என்று கேட்டார்.

அவனும் ''இன்னல்களெல்லாம் ஒன்று சேர்த்து உருவாக, அந்த உரு வம் என் சொற்படி நடக்கச் செய்ய வேண்டும். இதுதான் நான் கோரு வது'' என்றான்.

பிரம்மாவும் அவ்வாறே இன்னல் களை எல்லாம் ஒன்று திரட்டி ஒரு உருவாக்கி வச்சிரதந்தன் முன் நிறுத் தினார். அவன் கண்களுக்கு எதுவும் தெரியாமல் போகவே அவர் சூட்சும திருஷ்டியை அவனுக்கு அளித்து அந்த உருவத்தைப் பார்க்கச் செய்தார். அது சாதாரணமானவர்களின் கண் களுக்குப் புலப்படாமல் கருப்பு நிறத்தில் இருந்தது.

பிரம்மாவும் ''இது தான் நீ கேட்ட உருவம். இதனால் பலவித இன்னல் களை நீ வரவழைக்கலாம். அவற்றால் பயங்கர அழிவு ஏற்படும். இது நோய், பஞ்சம், பட்டினி, போர் என்று பல உருவங்களை எடுத்து உலகை வாட்டும் சக்தி பெற்றது. இதனை நீ எப்படி உபயோகிக்க வேண்டுமோ அப்படி உபயோகித்துக் கொள்,'' என்று கூறிவிட்டு மறைந்தார்.

மூஷிகாசுரனும் அந்த உருவத் திடம், ''நீ பெரிய யானையாகி அசுரகுணம் கொண்டு விக்கினேஸ் வரரான பிள்ளையாரைத் தாக்கி ஒழித்துவிடு'' என்றான். அதுவும் யானை போல பயங்கரமாய் கண் களை உருட்டி கோரைப் பற்களைக் கொண்டதாய் மலையே செல்வது போல ஆகாயத்தில் கிளம்பிச் சென்றது.

கைலாசத்தில் பிள்ளையார் நன்கு வளர்ந்து வந்தார். பிறகு அவர் தாம் பிறந்த இடமாகிய விசுவகர்மா அமைத்துக் கொடுத்த மாளிகைக்குச் செல்ல சிவனிடமும் பார்வதி தேவி யிடமும் அனுமதி பெற்று அங்கு சென்றார். வழியில் அவர் மன்மத னைக் கண்டு, ''ஓ! கண்ணில் படாத நீ என் கண்களில் பட்டுவிட்டாயே! என் மீது உன் அம்பு களை எய்கிறாயே! ஏன்?'' என்று கேட்டார்.

மன்மதனும் பணிவுடன், ''கஜ முகரே! என் மலர்க் கணைகள் உங் களை என்ன செய்துவிடும்? நான் யாருக்காவது தென்பட வேண்டும் என்று விரும்பினால் அப்படித் தென் படுவேன் என்று பரமேசுவரனே



எனக்கு வரம் அளித்திருக்கிறார். நீங்கள் மிகவும் வேண்டியவர். எனவே உங்கள் பார்வையில் பட்டேன். நீங்கள் சிவனாரின் மைந்தன். நான் விஷ்ணுவின் புதல்வன். என் வாகனம் கிளி. உங்கள் வாகனம் எலி. என் ஆயுதம் மலர்கள். உங்களது ஆயுதம் கயறும் அங்குசமும். மேலும் உங்களுக்குத் தம்பியாகக் குமரன் பிறக்க வேண்டுமே. பார்வதி, பரமசிவன் ஆகிய இருவரின் ஒளியால் குமரன் பிறந்து தாரகாசுரனை அழிக்க வேண்டுமே. அதற்காகத் தான் நான் முயல்வது. இப்போது கைலாசத்திற்குப் போய்க் கொண்டிருக்கிறேன்,'' என்றான்.

பிள்ளையாரும், ''மன்மதா! நான் கைலாசத்திலிருந்து வந்து கொண்டிருக்கிறேன். நீ அங்கே போய்க் கொண்டிருக்கிறாய், சரி. நீ செய்ய விரும்பும் வேலை தடங்கல் இல்லாமல் நன்கு நடந்து முடிவு பெறட்டும்,'' என்றார். மன்மதனும் உடனே அங்கிருந்து மாயமாய் மறைந்து கைலாசத்திற்குச் சென்றான்.

பிள்ளையார் தம் மாளிகையை வந்தடைந்தார். அவர் தம் மாளிகைத் தலைவாசல் அழகையும் சுற்றிலுமுள்ள இயற்கைக் காட்சியையும் ரசித்து நின்று கொண்டிருந்த போது, ''எங்கே அந்த விக்கினேஸ்வரன்?'' என்று இடி இடிப்பது போன்ற பயங்கரக் குரல் ஒன்று கேட்டது.

கஜாசுரன் உருவில் வந்த இன்னல்களின் உருவம் பிள்ளையாரின் முன் வந்து பூமியை மிதித்து அதிரச்

செய்தது. அது ''ஏய்! நான் கஜாசுரன். என் உருவமே யானை போன்றது. பிள்ளையாரே! உனக்கு யானை முகம் மட்டுமே உள்ளது. உன்னை ஒழித்துக் கட்டவே நான் வந்தேன்,'' என்றது.

விநாயகர் எதுவும் கேளாதவர் போல, ''ஆகா! எதையாவது துண்டு துண்டாக்கிச் சாப்பிட வேண்டும் என்ற ஆசை ஏற்படுகிறது. என் கோடாலியைத் தீட்டிக் கொடுக் கிறாயா?'' எனக் கூறியவாறே தம் கோடாலியை அவனிருந்த இடத்தில் போட்டார்.

அது அவனது காலில் பட்டு அந்தக் காலையே துண்டித்து விட்டது. அவன் 'பொத்'தெனக் கீழே விழுந்தான்.

பிள்ளையார் அவன் உடலின் மீது ஏறி நின்று களிநடம் புரியலானார். அவனோ ''ஐயோ! என்னை விட்டு விடுங்கள். பிரம்மா வச்சிரதந்தனுக் குக் கொடுத்த வரத்தின் பயனாக இன்னல்களை எல்லாம் ஒன்றாக்கி உருவமாகப் படைத்து என்னை சிருஷ்டித்தார். நான் கஜாசுரனாக வந்தேன். தக்க தண்டனை பெற் றேன்,'' என்றான்.

விநாயகரும் ''நான் தான் இன்னல்களைப் போக்கும் விக்கி னேஸ்வரன் ஆயிற்றே. அது தெரிந் தும் என்னை எதிர்த்தாய். எனவே உன்னைவிட்டு வைப்பது சரியல்ல. நீ காளிந்தி மடுவில் காளியன் என்ற விஷப் பாம்பாகி மறைந்து இரு. கிருஷ்ண பரமாத்மா தம் பால்ய லீலையால் உன்னைக் கொல்வார். அவரது திருவடி உன் தலை மீது படும். உன் பாவம் போகும். உன் தலைகளின் மீது அவரது திருவடி பதிந்து விடுமாதலால் உன் வம் சத்தவர்களின் தலைகளிலும் அந்தச் சின்னம் இருந்து கொண்டே இருக் கும்,'' எனக் கூறி தன் கோடாலியால் கஜாசுரனைத் துண்டு துண்டாகளாக் கினார். அவை அணுஅணுவாகி ஆகாயத்தில் கிளம்பி மறைந்தன.

தேவர்கள் விக்கின விநாயகர் மீது மலர்களைப் பொழிந்தார்கள்.





# கடமை மறவாதே!

வித்தியாநாதரின் குருகுலத்தில் ஓர் ஏழை விவசாயி தன் மகன் ஏகாம் பரத்தைப் படிக்க வைத்தான். வித் தியாநாதரின் மகன் ஞானசேகரன் அந்நாட்டு மன்னனின் தர்பாரில் ராஜபண்டிதர்.

ஒருமுறை ஞானசேகரன் தன் தந்தையைக் காணத் தன் பரிவாரங் களுடன் பல்லக்கில் தலைநகரில் இருந்து ஆடம்பரமாக வந்ததைக் கண்ட ஏகாம்பரம் தானும் ஞானசேகர னைப் போல அரசாங்க உயர்பதவி பெற்று ஆடம்பரமாகத் திரிய வேண்டும் என்று எண்ணினான்.

ஏகாம்பரம் தன் எண்ணத்தைத் தன் பெற்றோர்களிடம் கூறவே, அவர்கள் ''நாம் பரம்பரை பரம்பரையாகச் செய்து வரும் தொழில் விவசாயம். படித்துவிட்டு அரசாங்க வேலை தான் வேண்டுமென்று உன் போன்றவர்கள் போய்விட்டால் விவசாயத்தை யார் கவனிப்பது? நிலத்தை உழுது பயிர் விளைவித்தால் தான் உண்ண தானி யம் கிடைக்கும். தானிய உற்பத்தி இல்லாவிட்டால் மக்கள் எதைச் சாப்பிடுவார்கள்? நாமும் எதை உண்பது? நீ உத்தியோகம் என்று தலைநகருக்குப் போய்விட்டால் எங்களை யார் கவனித்துக் கொள் வார்கள்? அதனால் உத்தியோகத்தைத் தேடி அலையாதே! இந்த ஊரிலேயே இருந்து விவசாயத்தைக் கவனி!'' என்றார்கள்.

ஏகாம்பரம் தன் பெற்றோரின் இந்த அறிவுரையை ஏற்கவில்லை. ஒரு நாள் இரவு வீட்டிலிருந்த பணத்தை எடுத்துக் கொண்டு யாரிடமும் சொல்லாமல் அந்த ஊரைவிட்டுத் தலைநகருக்குக் கிளம்பிவிட்டான்.

அதிகாலையில் அவன் ஒரு கிராம எல்லையை அடைந்தபோது அவ னது வயதுடைய வாலிபன் ஒருவன் பனைமரத்தில் ஏறி, கள்ளை இறக்கி, அக்கலயத்தோடு கீழே இறங்கி

*- பாபநாசம் சாமா -*



வருவதைப் பார்த்தான். ஏகாம்பரம் அவனருகே போய், ''என்னப்பா இது? கள் குடியைக் கெடுக்கும் என்பது தெரியாதா? இந்த அரு வருக்கத்தக்க தொழிலை ஏன் செய் கிறாய்? படித்திருந்தால் அரசாங்க வேலையைத் தேடிக் கொள். இந்தத் தொழிலை விட்டுவிடு!'' என்றான்.

அதற்கு அந்த இளைஞன் ''என் பெயர் குப்பன். வித்தியாநாதரின் குருகுலத்தில் படித்தவன். படிப்பை முடித்துவிட்டு அரசாங்க உத்தியோகத் திற்கு ஆசைப்பட்டு எங்கள் பரம் பரைத் தொழிலான கள் இறக்கு வதை வெறுத்து விட்டுவிட்டு உத்தி யோகம் கிடைத்ததால் தலைநகருக் குச் சென்றேன். என் தாய் தந்தையர் தம்மை விட்டுப் போக வேண்டாம் என்று கெஞ்சியும் அதை நான் பொருட்படுத்தவில்லை. நான் அவர்களை விட்டுச் சென்றதால் அவர்கள் அப்பிரிவிற்காக அழுது அழுது தம் பார்வையை இழந்து விட்டார்கள். அதைக் கேட்டு நான் துடிதுடித்து என் உத்தியோகத்தை உதறி எறிந்துவிடடு இங்கே வந்து என் பெற்றோர்களை கவனித்து வருவதோடு எங்கள் பரம்பரைத் தொழிலையே செய்தும் வருகிறேன். நீ தலைநகருக்கு வேலை தேடியா போகிறாய்? பேசாமல் உன் ஊருக் குத் திரும்பிப் போ! உன் தாய் தந்தையரைகவனித்துக் கொண்டு உன் பரம்பரைத் தொழிலான விவசாயத் தையே செய். இதுதான் உன் கடமை!'' என்றான்.

ஆனால் ஏகாம்பரம் குப்பன் கூறியபடி செய்யாமல் தலைநகரை நோக்கியே சென்றான். வெயில் அதிகமாகவே அவன் களைத்துப் போனான். பசியும் எடுத்தது.

சற்று தூரத்தில் ஒரு குடிசையைக் கண்டு அங்கு சென்றான். அதில் நாற்பது வயது மதிக்கத்தக்க ஒருவன் தன்னைச் சுற்றி பச்சிலைகளையும் வேர்களையும் வைத்துக் கொண்டு ஏதோ மருந்து தயாரித்துக் கொண் டிருப்பதை அவன் கண்டான். அவ்வப்போது அவன் ஓர் ஓலைச் சுவடியையும் பார்த்து மருந்து கலப்பதை ஏகாம்பரம் பார்த்தான். தன் குடிசைக்குள் வந்த ஏகாம்பரத்தைப் பார்த்த அவன், ''யாரப்பா நீ? நல்ல வெயிலில் வந்திருக்கிறாயே! எந்த ஊருக்குப் போகப் போகிறாய்?'' என்று கேட்டான்.

ஏகாம்பரமும். தன்னைப் பற்றிக் கூறி தான் தலைநகருக்குப் போகும் நோக்கத்தையும் கூறினான். அப்போது அந்த மனிதன், ''என் பெயர் கோவிந்தன். எனக்கு தாய், தந்தை, உற்றார் உறவினர் என்று யாருமே இல்லை. என்னை ஒரு யோகி இங்கு கொண்டு வந்து வைத்திய சாஸ்திரம் கற்பித்து வருகிறார். நான் பல நோய்கள் பற்றியும் அவற்றைப் போக்க மருந்துகள் தயாரிப்பதையும் தெரிந்து கொண்டிருக்கிறேன். இப்போது ஒருவர் இழந்த பார்வையை மீட்டுக் கொடுக்க என் குருநாதர் கொடுத்த ஓலைச் சுவடியின் உதவியுடன் மருந்து தயாரித்துக் கொண்டிருக்கிறேன்,'' என்றான்.

அவ்விருவரும் பேசிக் கொண்டிருக்கையில் கோவிந்தனின் குருவான யோகி வந்தார். அவர் ஏகாம்பரத்தைப் பற்றி விசாரித்துவிட்டு அவனது பசியைப் போக்கி உணவளித்தார்.

பிறகு அவர் ''நீ வழியில் கள் இறக்கும் குப்பனைப் பற்றிச் சொன்னாயே! அவன் வாழ்க்கையின் உண்மை நோக்கத்தை விளக்கி இருக்கிறான். நானோ இந்த கோவிந்தனோ எங்கும் போய் பிழைக்க முடியும். எங்களுக்குக் குடும்பம்ட என்று ஒன்று இல்லை. மக்களுக்கு உதவ புதிதாகக் கண்டுபிடித்து வருகிறோம். ஆனால் குப்பன் எங்களைவிட உயர்ந்தவன். தன் பெற்றோருக்கும் குடும்பத்தினருக்கும் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்து வருவதோடு தன் பரம்பரைத் தொழிலையும் விடாமல்



இருக்கிறான். அவனே உயர்ந்தவன் என்பதை உங்களுக்கு நிரூபிக்கிறேன். கோவிந்தா! இப்போது தயாரித்த கண் மருந்ததையும் எடுத்துக் கொள். நாம் போய் குப்பனைப் பார்ப்போம்!'' என்றார்.

கோவிந்தனும் தான் தயாரித்த மருந்தை எடுத்துக் கொள்ள மூவரும் குப்பன் வசிக்கும் ஊருக்குப் போய் அவனது குடிசையை அடைந்தனர்.

அப்போது பார்வையை இழந்த தன் பெற்றோருக்கு குப்பன் ராமாயணத்தைப் படித்து விளக்கிக் கூறிக் கொண்டிருந்தான். தன் வீட்டிற்கு மூன்று பேர்கள் வந்தது கண்டு அவன் எழுந்து மரியாதையுடன் வரவேற்றான். யோகியும், ''குப்பா! உன்னைப் பற்றி விவரமாக இந்த ஏகாம்பரம் என்னிடம் கூறினான். உன் தாய்

தந்தையருக்குப் பார்வை கிடைக்கச் செய்யும் மருந்து கொண்டு வந்திருக்கிறேன்,'' எனக் கூறினார்.

பிறகு கோவிந்தனிடமும், ஏகாம்பரத்திடமும் ''நீங்கள் உங்கள் மனதில் இவர்களுக்குப் பார்வை கிடைக்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டு ஒவ்வொருவராக இந்த மருந்தை அவர்களது கண்களில் போடுங்கள். முதலில் கோவிந்தன் போடட்டும்,'' எனக் கூறினார்.

கோவிந்தனும் மனதில் வேண்டிக் கொண்டு அத்தம்பதிகளின் கண்களில் மருந்தைத் தடவினான். அவர்களுக்குப் பார்வை வரவில்லை. அடுத்து ஏகாம்பரமும் அவர்களது கண்களில் மருந்தைத் தடவியும் அவர்களுக்கு பார்வை கிடைக்கவில்லை.

முடிவில் குப்பன் மனதில் வேண்டியவாறே தன் பெற்றோர்களின் கண்களில் மருந்தைத் தடவியதும் அவர்களுக்குப் பார்வை கிடைத்துவிட்டது.

அப்போது யோகி, ''கோவிந்தன் தனக்கு யாருமே இல்லை என எண்ணி வந்ததால் அவன் கையால் தடவிய மருந்து பயனளிக்கவில்லை. தாய் தந்தையரை கவனிப்பதைவிட அரசாங்க உத்தியோகமே பெரிது என எண்ணி வீட்டைவிட்டு வெளியேறிய ஏகாம்பரத்தாலும் மருத்தைத் தடவி இத்தம்பதிகளுக்கு பார்வை கிடைக்கும்படிச் செய்ய முடியவில்லை. தாய் தந்தையருக்குப் பணிபுரிவதே தன் கடமை என எண்ணி அதன்படி நடந்தும், தன் பரம்பரைத் தொழிலை விட்டுவிடாமல் செய்தும் வரும் குப்பன் தன் பெற்றோர்களின் நலனை வேண்டி மருந்தைத் தடவியதும் அவர்களுக்குப் பார்வை கிடைத்தது,'' என்றார்.

அப்போது ஏகாம்பரம் யோகியின் கால்களில் விழுந்து வணங்கி, ''எங்கள் மூவரில் யார் உயர்ந்தவர் என்பதை எங்களுக்கு எடுத்துக் காட்டிவிட்டீர்கள். இனி நானும் குப்பன் காட்டிய வழியிலேயே செல்வேன்,'' எனக் கூறி எல்லோரிடமும் விடை பெற்றுக் கொண்டு தன் ஊருக்கே திரும்பிச் சென்றுவிட்டான்.








# தெரிந்தும் தெரியாது!

மலைய நாட்டு மன்னன் மங்காபதியின் அமைச்சர் இறந்து போகவே, அவன் மந்திரியே இல்லாமல் தானே எல்லா முடிவுகளையும் எடுத்து ஆட்சி புரியலானான். அவன் புத்திசாலி அல்ல. அதனால் அவன் போடும் கட்டளைகள் ஒன்றுக்கொன்று முரணாக இருந்தன.

மக்கள் தன் ஆட்சியைப் பற்றி என்ன பேசிக் கொள்கிறார்கள் என அறிய அவன் இரவு வேளைகளில் நகர வீதிகளில் மாறுவேடத்தில் திரிந்தும் வரலானான்.

ஒரு நாளிரவில் அவன் மாறு வேடத்தில் நகர வீதி ஒன்றில் திரிந்து கொண்டிருக்கையில் ஒரு வீட்டில் கணவனும் மனைவியும் ஏதோ வாக்குவாதம் செய்து கொண்டிருப்பதைக் கேட்டு மறைவில் நின்று அவர்களது பேச்சை ஒட்டுக் கேட்கலானான்.

கணவன் தன் மனைவியிடம், ''இதென்ன இப்படிச் செய்து விட்டாய்? உனக்குத் தெரியவில்லை என்றால் என்னிடம் சொல்லி இருக்கலாமே. நான் செய்திருப்பேனே!'' என்றான்.

மனைவியோ ''உங்களுக்கு எல்லாமே தெரியுமா? எதற்கெடுத்தாலும் தெரியும், தெரியும் என்று சொல்லத்தான் உங்களுக்குத் தெரியும். எதையும் செய்யத் தெரியாது,'' என்றாள். கணவனோ, ''நாவை அடக்கிப் பேசு! உன்னால் இந்த ஒரு சின்ன வேலையைச் செய்ய முடியவில்லை. ஏதோ ஜம்பம் அடிக்கிறாய். என்னை என்னவென்று நினைத்துக் கொண்டாய்? இந்த நாட்டை ஆளும் பொறுப்பை என்னிடம் கொடுத்தால் கூட திறன்பட ஆட்சி புரிந்து காட்டுவேன். தெரிந்ததா?'' என்றான்.

இதைக் கேட்ட மன்னன் ஏதோ

*(இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் வெளியிடப்பட்ட கதை)*

யோசித்தவாறே அரண்மனையை அடைந்தான்.

மறுநாள் காலையில் ''இந்த நாட்டில் யாரும் 'எனக்குத் தெரியும்' என்று சொல்லக் கூடாது. அப்படி யாராவது சொன்னால் கடுமையாக தண்டிக்கப்படுவார்கள்,'' என்று உத்தரவு போட்டு அதை நாடெங் கிலும் பறை சாற்றுவித்தான். அன்று முதல் அந்நாட்டு மக்களிடம் யார் எதைக் கேட்டாலும் 'தெரியாது' என்ற பதிலே கிடைத்து வந்தது.

இப்படியே சில நாட்கள் கழிந்தன. ஒரு நாள் அயல்நாட்டு சுற்றுலாப் பயணிகள் இருவர் அந்நாட்டைச் சுற்றிப் பார்க்க வந்தார்கள். அவர்கள் யாரிடம் எதைக் கேட்டாலும் 'தெரியாது' என்ற விடை கிடைத்தது கண்டு ஆச்சரியப்பட்டார்கள்.

அவர்கள் சலிப்புடன் ''இதென்ன பாழாய்ப்போன நாடு! யாரிடம் எது பற்றிக் கேட்டாலும் 'தெரியாது' என்ற ஒரே பதில் தான் கிடைக்கிறது. இப்படியே இருந்தால் இந்த நாடு உருப்படுமா?'' என்று தமக்குள் பேசிக் கொண்டார்கள். அதை மாறுவேடத்தில் திரிந்து கொண்டிருந்த மன்னன் கேட்டுவிட்டான்.

மறுநாளே மன்னன், ''நம் நாட்டில் யாருமே 'தெரியாது' என்ற வார்த்தையைச் சொல்லக் கூடாது. மீறிச் சொன்னால் கடுமையாக தண்டிக்கப் படுவார்கள்,'' என்று கட்டளை பிறப்பித்து அறிவித்தான்.

இதனால் அந்நாட்டு மக்களால் 'எனக்குத் தெரியும்' என்றும் சொல்ல முடியவில்லை, 'தெரியாது' என்றும் சொல்ல முடியவில்லை. யார் எதைக் கேட்டாலும் மௌனம் சாதித்தார்கள்.

இதைக் கண்ட அந்த அயல்



நாட்டுப் பயணிகள் மன்னனை பேட்டி கண்டு, ''இதென்ன விபரீத நிலை?'' என்று கேட்டார்கள். மன்னனும், ''இதற்குக் காரணம் ஒரு கணவனும் மனைவியும் பேசிக் கொண்டது தான்,'' எனக் கூறி அவர்களை அழைத்துக் கொண்டு தான் ஒரு நாள் ஒட்டுக் கேட்ட வீட்டிற்குச் சென்றான்.

மன்னன் கணவனிடம், ''ஒரு நாள் நீயும் உன் மனைவியும் காரசாரமாக வாக்குவாதம் புரிந்தீர்களே! நீ 'எனக்குத் தெரியும்' என்று கூற, உன் மனைவி 'உங்களுக்கு ஒன்றும் தெரியாது' என்றாளே! அப்போது நீ 'எனக்கு எல்லாம் தெரியும். இந்த நாட்டை ஆளக் கொடுத்தால் நன்றாக ஆட்சி புரிவேன்' என்றும் கூறினாயே! நீங்கள் இருவரும் அன்று எது பற்றிப் பேசிக் கொண்டிருந்தீர்கள்?'' என்று கேட்டான்.

கணவனும் சற்று யோசித்துவிட்டு பலமாகச் சிரித்தவாறே, ''அன்று இவள் வார்த்த தோசை தீய்ந்து போய்விட்டது. 'இந்த சிறுவேலை கூடச் செய்யத் தெரியாதா, என்னிடம் சொல்லி இருந்தால் நான் வார்த்துக் கொடுத்திருப்பேனே!' என்ற அர்த்தத்தில் அப்படிச் சொன்னேன். இவளோ, ''உங்களுக்கு எதுவுமே தெரியாது என்று கூற, 'எல்லாமே எனக்குத் தெரியும்' என்று அடித்துக் கூறினேன். அதனால் எங்களிடையே வாக்குவாதம் முற்ற, ஒரு பேச்சிற்கு 'என்னால் நாட்டைக் கூட ஆள முடியும்' என்று சொன்னேன். இது தான் விஷயம்,'' என்றான்.

அதைக் கேட்டு மன்னனும் அயல் நாட்டுப் பயணிகளும் சிரித்தனர். அவர்கள் மன்னனிடம் ''நீங்கள் மந்திரி என்று யாரையும் நியமித்துக் கொள்ளவில்லையா?'' என்று கேட்டார்கள்.

மன்னனும், ''இல்லை,'' என்று கூறி, ''நீங்கள் இருவருமே என் மந்திரிகளாக இருக்கிறீர்களா?'' என்று கேட்டான். அவர்களும் சம்மதித்து மந்திரிகளாகி அந்த மன்னனுக்கு நல்ல யோசனைகள் கூறி வந்தார்கள்.





# திருட்டை விடு!

கண்ணாயிரம் அந்த ஊரில் அந்தப் பேட்டையில் கைதேர்ந்த திருடன் என்று பெயர் பெற்றவன். இளை ஞன் அழகன். நல்ல புத்திசாலி.

அதனால் பக்காத் திருடர்களெல் லாம் அவனுக்குத் தன் பெண்ணைக் கல்யாணம் செய்து கொடுத்து, அவனைத் தன் மாப்பிள்ளையாக ஆக்கிக் கொள்ள வேண்டுமென்று போட்டி போட்டனர்.

அவர்கள் அவனிடம் திருமண விஷயமாகப் பேசவந்தபோது, அவன் அவர்களிடம் ''என்னுடைய லட் சியம் அரசாங்கப் பொக்கிஷத்தைக் கொள்ளை அடிப்பதுதான். அது நிறைவேறும் வரை நான் திருமணம் செய்து கொள்ளப் போவதில்லை,'' என்று கூறி வந்தான்.

அந்தப் பேட்டையின் முக்கிய திருடர்களில் சிகாமணியும் ஒருவனா வான். அவனது மகள் மல்லி. அவள் மிகவும் அழகானவள். புத்திசாலியும் கூட. அவளை மணக்கப் பல இளை ஞர்கள் விரும்பினார்கள். ஆனால் அவள் தன்னை நிராகரித்துவிடு வாளோ என்று ஒவ்வொருவனும் அஞ்சினான்.

ஒருநாள் கண்ணாயிரம் தற்செய லாக மல்லியைப் பார்த்தான். அவளது அழகில் மயங்கி நின்ற அவன் தன் மனதில், ''நான் இவளைத் தான் மணக்க வேண்டும். ஆனால் அரசாங்க பொக்கிஷத்தைக் கொள்ளை அடித்த பிறகே திருமணம் செய்து கொள் வேன் என்று எல்லோரிடமும் சொல்லி வருகிறேனே! நான் அந்தக் கொள்ளை அடிப்பதற்குள் வேறு யாராவது வந்து மல்லியை மணம் செய்து கொண்டுவிடுவானோ? விடக் கூடாது. நாளைக்கே போய் சிகாமணி யைக் கண்டு பேசுகிறேன்,'' என்று எண்ணிக் கொண்டான்.

மறுநாள் கண்ணாயிரம் சிகாமணி யின் வீட்டிற்குப் போகவே, அவனும்

*- சிந்துஜா சங்கர் -*

அவனை வரவேற்று உட்காரச் சொல்லி, ''வாப்பா கண்ணாயிரம்! ஏது இவ்வளவு தூரம் வந்திருக்கிறாய்? என்ன விஷயம்? சொல். என்னாலானதைச் செய்கிறேன்,'' என்றான்.

கண்ணாயிரமும், ''உன்னிடம் பேசவே வந்தேன். விஷயம் திருட்டையோ அல்லது கொள்ளை அடிப்பதைப் பற்றியோ அல்ல. முற்றிலும் வேறு விஷயம். நேராக விஷயத்தையே சொல்லிவிடுகிறேன். உன் மகள் மல்லியைக் கல்யாணம் செய்து கொள்ள விரும்புகிறேன். அவளை எனக்குத் திருமணம் செய்து வை!'' என்றான்.

சிகாமணியும், ''எனக்கு இதில் எந்த ஆட்சேபணையும் இல்லை. ஆனால் இதுபற்றி மல்லியின் விருப்பப்படி தான் நடக்க வேண்டும். அவளையே இப்போது இங்கே கூப்பிட்டுக் கேட்கிறேன்,'' என்று கூறி, ''மல்லி!'' என்று குரல் கொடுத்தான். உடனேயே அவளும் வந்தாள்.

சிகாமணி அவளிடம், ''கண்ணாயிரம் உன்னை மணக்க விரும்புவதாகச் சொல்கிறான். இவனைப் பற்றி நான் சொல்லத் தேவையே இல்லை. எல்லோருமே அறிவார்கள். நீ என்ன சொல்கிறாய்?'' என்று கேட்டான்.

அவளும், ''இவர் என்னை மணக்க வேண்டும் என்றால் நான் வைக்கும் பரீட்சையில் தேற வேண்டும். அதற்குச் சம்மதிக்கிறாரா?'' என்று கேட்டாள். கண்ணாயிரமும் சம்மதிக்



கவே, மல்லியும் ''இவர் எனக்குத் தெரியாமல் என்னுடைய பொருள்களில் ஒன்றைத் திருடிக் காட்ட வேண்டும்,'' என்றாள்.

மூன்று நாட்கள் கழிந்தன. அடுத்த ஊரின் தேர்த் திருவிழாவைக் காண மல்லி சென்றாள். கண்ணாயிரமும் தன் உருவை மாற்றிக் கொண்டு பொம்மை விற்பவன் போல அதே தேர்த் திருவிழாவிற்குச் சென்றான். அங்கு மல்லியைப் பின் தொடர்ந்து கொண்டே இருந்தான்.

துணிக்கடை, விளையாட்டுப் பொருள்கள் கடை, பட்சணக் கடை என்றெல்லாம் அவள் போய்க் கொண்டிருக்கவே, கண்ணாயிரம் அவளைப் பின் தொடர்ந்து கொண்டே இருந்தான். அவள் குடை ராட்டினத்தில் ஏறி ஆடப் போன போது கண்ணாயிரம்

அவள் கழுத்தில் அணிந்திருந்த வைர மாலையைத் திருடிக் கொண்டு போய் விட்டான். மறுநாள் அவன் சிகாமணியின் வீட்டிற்குப் போய் மல்லியிடம், ''பார்த்தாயா என் சாமர்த்தியத்தை. நீ அணிந்திருந்த விலையுயர்ந்த வைர மாலையை உனக்குத் தெரியாமல் திருடிவிட் டேன்,'' எனக் கூறித் தான் திருடிய வைர மாலையை அவளிடம் கொடுத்தான்.

அவளோ சிரித்தவாறே, ''நீ தான் கைதேர்ந்த திருடனா? இல்லை. நீ பொம்மை வியாபாரி போல வேடம் அணிந்து என்னைப் பின் தொடர்ந்ததை நான் கவனித்துக் கொண்டே இருந்தேன். நீ என் கழுத்திலிருந்து மாலையைத் திருடியதும் எனக்குத் தெரியும். ஆனால் நீ திருடியது விலையுயர்ந்த வைர மாலை இல்லை. இது போலி. மூன்று ரூபாய் கூடப் பெறாது. அசல் நகைக்கும் போலி நகைக்கும் வித்தியாசம் தெரியாத நீயா பொக்கிஷத்தைக் கொள்ளை அடிக்கப் போகிறாய்?'' என்று கூறினாள். கண்ணாயிரம் 'திரு, திரு'வென்று விழித்தான்.

அப்போது மல்லி, ''உனக்கு எதற்கு இந்தத் திருட்டுத் தொழில்? எந்த நிமிடத்தில் அரசாங்க வீரர்கள் பிடித்துவிடுவார்களோ என்று ஏன் பயந்து சாக வேண்டும்? பேசாமல் நான் சொல்வதைக் கேள். நீயும் நானும் ஐம்பது மைல் தூரத்திலுள்ள என் மாமாவின் ஊருக்குப் போய் விடலாம். அவருக்கு ஏராளமான வயல்கள் உள்ளன. நாம் விவசாயம் செய்ய விரும்புவதாகக் கூறினால் அவர் இரண்டு மூன்று வயல்களைக் கொடுப்பார். அவற்றில் நாம் விவசாயம் செய்து கௌரவமாக வாழலாம். நீ இந்தத் திருட்டுத் தொழிலை விட்டுவிடு!'' என்றாள்.

கண்ணாயிரமும், ''நீ சொல்வதை ஏற்கிறேன். ஆனால் உன் தந்தை இதற்கு இணங்க வேண்டுமே!'' என்றான். மல்லியும் ''என் தந்தை இதற்குச் சம்மதித்ததோடு நம்முடன் வருகிறார். அதனால் நாளையே நாம் இந்த ஊரைவிட்டுப் புறப்பட்டுப் போகிறோம்,'' என்றாள். கண்ணாயிரமும் 'அப்படியே செய்யலாம்!' என்று கூறித் தலையை ஆட்டினான்.



அம்புலிமாமாவின்
அன்பளிப்பு

# வீர தீர பராக்கிரமன் 14

ஓவியம் : பாணி

மன்னன் மகேந்திரவர்மனை யாரோ கடத்திவிட்டார்களென்ற வதந்தி சந்திரபுரியில் நிலவியது. மன்னன் இருக்கும் இடத்தை தாந்திரீகனான நாகபந்துவால் கூற முடியும் என்று ஒரு மந்திரவாதி நரேந்திரதேவனிடம் கூற, அவனும் காட்டிலுள்ள நாகபந்துவின் இருப்பிடத்தை அடைந்தான். நாகபந்துவின் சீடன் அங்கு வருபவர் யாரானாலும் அங்குள்ள விதிகளுக்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டும் என்று நரேந்திரதேவனிடம் கூறினான்.

நரேந்திரதேவன் கோபம் கொண்டான்.

எம் குருநாதர் விதித்த விதிகளின்படி நடந்தே தீர வேண்டும்.

நான் சேனாதிபதி என்பது தெரியாதா? எனக்கு எப்படி யாரோ கட்டளை இட முடியும்?

இங்குள்ள விதிகளின்படி நடந்தாலே குருநாதர் மகிழ்ச்சி அடைவார், தெரிந்ததா?

நரேந்திரதேவனும் அங்கு கூடிய மற்றவர்களும் கேட்கும் படி மந்திரவாதி ஓர் அறிவிப்பைச் செய்தான்.

குருநாதரின் தரிசனம் சில நாட்களுக்கே கிடைக்கும். அப்போது பக்தர்கள் தம்மை முழுமையாகச் சமர்ப்பித்துக் கொண்டு அவர் சர்வ வல்லமை கொண்டவர் என்று ஒப்புக் கொள்ள வேண்டும்.


மனித வர்க்கத்தின் நலனை விரும்பி இன்று இரு மகாபுருஷர்கள் இந்த சுபவேளையில் இங்கு வந்து கலந்து கொண்டிருக்கிறார் கள். இது நல்லதற்கு அறிகுறி.


மந்திரவாதி நரேந்திரதேவனைத் திருப்திப் படுத்த அவனைப் புகழ்ந்தான்.
ஐயா! உங்களுக்கு ஒளிமயமான எதிர்காலம் உள்ளது. குருசிரேஷ்டர் நாகபந்துவின் உதவியால் நீங்கள் சக்கரவர்த்தியே ஆகிவிடுவீர்கள்.
எம் குருநாதரின் வருகையை எதிர்பாருங்கள்! அவரது விஜயம் கண்கொள்ளாக் காட்சி. அவரது அறிவுரைகள் உங்களை வாழ்வில் உயர்த்திவிடும்.
அவர் கூறுவதை கடைப்பிடிக்கிறேன். இப்போது நான் என்ன செய்ய வேண்டுமென்று கூறுங்கள்.


கொஞ்ச நேரத்திற்கு அப்பகுதியில் ஒரு புகை மண்டலம் சூழ்ந்திருந்தது. ஆலயத்தை நோக்கி ஒரு பயங்கர உருவம் வந்து கொண்டிருந்தது. அதன் தலை மீது பாம்பின் கண்கள் போல இரு மணிகள் ஒளிவிட்டன. கழுத்தில் பாம்புச் சட்டை போல ஓர் அங்கவஸ்திரம் தொங்கிக் கொண்டிருந்தது.

இடுப்பில் கட்டி இருந்த துணி ஒன்றைத் தவிர உடலின் மற்ற அங்கங்களில் மூலிகைகளால் தயாரிக்கப்பட்ட பஸ்மம் பூசப் பட்டிருந்தது. கழுத்தைச் சுற்றி இரு பாம்புகள். அவன் நரேந்திர தேவனைக் கடந்து சென்றவாறே பயங்கரமாகச் சிரித்தான்.



தொன்றுதொட்டு உன் எதிரியே என் எதிரியாக இருந்து வருகிறான். நாம் நடத்தும் இந்த யாகத்தில் நீயும் கலந்து கொள்!

ஆலயத்தை நோக்கி நடந்த வாறே தன் சீடர்களில் ஒரு வனைக் கூப்பிட்டான்.

இன்று இவர் நம் விருந்தாளி. அவர் என்ன செய்ய வேண்டும் என்று சொல்!

அவ்வாறே செய்கிறேன், குருவே!

தாங்களும் மற்றவர்களைப் போல உடை மாற்றி தரிசனம் செய்ய வரவேண்டுமென எங்கள் குருநாதர் விரும்புகிறார்.


தங்களது லட்சியம் நிறைவேற வேண்டுமென்றால் எவ்விதத் தயக்கமும் கூடாது.
அப்படியே செய்கிறேன். உடனே உடைகளை மாற்றிக் கொண்டு வருகிறேன்.


நரேந்திரதேவன் திரும்பி வந்தபோது ஏதோ ஒரு மந்திரசக்திக்குக் கட்டுப்பட்டவனாக ஆகி தாந்திரீகனின் கால்களில் விழுந்து வணங்கினான்.


நண்பனே, எழுந்திரு! என் பக்கத்தில் அமர்ந்து வேலைகளில் பங்கெடுத்து பக்தி சிரத்தையைக் காட்டு!
தொடரும்




# போட்டோ வாக்கியப் போட்டி





**இந்த போட்டோக்களுக்கு ஒவ்வொரு சொல்லாலோ, அல்லது சிறு வாக்கியங்களாலோ தொடர்புடையதாக எழுதி அனுப்புங்கள்.**

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25ந் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/–

போட்டி முடிவு ஜூலை 2002 இதழில் வெளியிடப்படும்.

போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா,
எண்: 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி,
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

வாழ்த்துக்கள்

மார்ச் 2002 இதழில் வெளியிடப்பட்ட
போட்டியில் வெற்றி பெற்றவர் :
**விஷ்ணுவர்தன்**
163/2, கோல்டன் ஜூபிலி காலனி,
அண்ணாநகர்,
சென்னை - 600 040.

பரிசு பெற்ற வாக்கியங்கள்



பக்தி பெருக்கும்
சக்தி பெருகும்

அம்புலிமாமா வருட சந்தா :

இந்தியாவில் ரூ.120/–

Payment in favour of CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 600 026 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : Viswam

AMBULIMAMA (Tamil) MAY 2002 Regd. with Registered Newspaper of India No.1095/57
Registered No. TN/Chief PMG-839/2001